


மலர் 5 இதழ் 22 | 1946 ஜனவரி 6 | பார்த்திப மார்கழி 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சிறு கதைப் போட்டியில் முதற் பரிசு ரூ. 500 பெற்ற "சொக்கி சொன்னாள்" என்னும் கதையின் ஒரு காட்சியை நமது புது வருஷத்து அட்டைப் படம் சித்திரிக்கிறது.

1945-ம் வருஷத்துச் சிறு கதைப் போட்டிக்கு நாம் ஏற்படுத்திய பஞ்சாயத்து அங்கத்தினர் இலக்கிய விஷயங்களில் மிகக் கடுமையான கொள்கைகளைக் கொண்டவர்கள். அதோடு இலக்கியத்தை மதிப்பிடுவதில் அபிப்பிராய பேதமும் உடையவர்கள். எனினும், மேற்படி பஞ்சாயத்தார் ஒரு முகமாகச் "சொக்கி சொன்னாள்" என்னும் கதையை முதற் பரிசுக்குத் தேர்ந்தெடுத்தார்கள் என்பது மேற்படி கதையின் சிறப்புக்குச் சிறந்த அத்தாட்சியாகும்.

இந்தக் கதையை எழுதிய ஸ்ரீமதி பி. மீனாக்ஷி என்னும் பெண்மணி தமது வாழ்க்கையிலேயே முதல் முதலாக எழுதிய கதை இதுதான் என்பது ஓரளவு அதிசயமளிக்கும் சம்பவம். இதிலிருந்து தமிழ் நாட்டில் சிறு கதை எழுதும் திறமை எவ்வளவு தூரம் மறைந்து கிடக்கின்றது என்பதும், அதை வெளிக்குக் கொண்டுவரும் முயற்சி எவ்வளவு அவசியம் என்பதும் வெளியாகின்றன.

இத்தகைய தமிழ் இலக்கியத் தொண்டில் நாமும் ஒரு சிறு பங்கைப் பெறுதல் சாத்தியமானது குறித்துப் பெருமையும் மகிழ்ச்சியும் ஒருங்கே எய்துகின்றோம்.

★




★

# 4 மணி ஆகிறது



உலகமெங்கும் லக்ஷக்கணக்கான வீடுகளில் "நான்கு மணி"க்கு ஒரு விசேஷ அர்த்தமுண்டு. ஐசுவரியமுள்ள அரண்மனைகளிலும், எளிமையான குடிசைகளிலும், பெரிய குடும்பங்களிலும், தனிமையாக ஓரிருவர் உள்ள வீடுகளிலும், சித்திர வேலைக்காரரும், நிலக்கரி சுரங்க வேலையாளும், பிரபுவும், எளிமையான குடியானவனும், பனியுறையும் வடக்கும் பிரதேசத்திலும், வேர்வையொழுகும் உஷ்ணப் பிரதேசங்களிலும் மாலை மணிக்கு எல்லோரும் சமமாக ஓர் மனதுடன் மனிதருக்கு மனிதர் வேற்றுமையின்றி சமநிலையடைகின்றனர். ஏன்? நான்கு மணி தான் உலகெங்கும் டீ அருந்தும் நேரம்!

இச்சாதாரண செயல் எவ்வளவு சுகத்தையும் ஆனந்தத்தையும் அளிக்கிறது! நன்றாக தயாரிக்கப்பட்ட டீ மனித சமூகத்துக்குக் கிடைத்த ஒரு மிக அரிய பொருளென்றுக் கூறல் மிகையாகாது. ஆனாலும், நல்ல டீ தயாரிக்கும் சில சுலபமான முறைகளைக் கவனியாமல் எவ்வளவு பேர் இவ்வரிய பானத்தின் பூரா நலனை அடைவதில்லை!



## நல்ல டீ தயாரிக்கும் முறை

1. கெட்டிலில் டீ காய்ச்சக்கூடாது. டீ பாத்திரத்தை உபயோகியுங்கள்.
2. உலர்ந்த டீயை பாத்திரத்தில் போடும்போது பாத்திரம் ஈரமில்லாமல் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நறுமணமுள்ள கஷாயம் கிடைக்கும்.
3. கப்புக்கு ஒரு டீ ஸ்பூன் வீதமும், பாத்திரத்துக்காக ஒரு டீ ஸ்பூனும் டீ போடவும்.
4. புதிதாக காய்ச்சிய நீரையே உபயோகிக்கவும்; ஒரு தரம் காய்ச்சிய நீரையோ, அதிகமாகவோ அல்லது குறைவாகவோ காய்ச்சப்பட்ட நீரையோ ஒருபோதும் உபயோகிக்காதீர்கள். தள தள வென்று குமிழியிட்டு கொதிக்கும் நீர் தான் சரியாக காய்ச்சின நீர்.
5. கஷாயம் இறங்க குறைந்தது 5 நிமிஷ கால நேரம் வேண்டும்.
6. பாத்திரத்தில் இருக்கையிலேயே பால் சர்க்கரை சேர்க்காதீர்கள்; கப்புகளில் விட்ட பிறகு சேர்க்கவும்.

எந்நேரமும்

டீ

டீ அருந்தும் நேரம்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK-248-A-19



கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 22

# என்ன சேதி?

## சர்க்கார் தயாராகிறது!

மத்திய சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் பல ஸ்தானங்களைக் கைப்பற்றியிருக்கிறது. அதைப்போல, முஸ்லிம் லீக்கும் பல ஸ்தானங்களைக் கைப்பற்றியிருக்கிறது. ஆனால், இந்திய சர்க்காரும் பல ஸ்தானங்களைக் கைப்பற்றியிருக்கிறார்கள் என்றால், அது அதிசயமாயிருக்கிறது அல்லவா? இத்தனைக்கும், இந்திய சர்க்கார் தேர்தலில் கலந்து கொள்ளவில்லை: ஒரு அபேட்சகரையும் எதிர்த்துப் போட்டி போடவில்லை. அப்படியிருந்தும் இருபத்தாறு ஸ்தானங்களைக் கைப்பற்றியிருக்கிறது!

மத்திய சட்டசபைத் தேர்தலிலே காங்கிரசுக்குக் கிடைத்திருக்கும் அமோகமான வெற்றி இந்திய சர்க்காரின் வயிற்றைக் கலக்கியிருக்கிறது. அதற்காக அவர்கள் புத்திசாலித்தனமாக ஒரு காரியம் செய்திருக்கிறார்கள். வைஸிராயின் நியமன அங்கத்தினர்கள் மொத்தம் முப்பத்தொன்பது பேர். இதில், உத்தியோகஸ்தர்கள் இருபது பேர். உத்தியோகப் பற்றற்றவர்கள் பத்தொன்பது பேர். இப்போது வைஸிராய் தம்முடைய விசேஷாதிகாரத்தைப் பிரயோகித்து, உத்தியோகஸ்தர்களின் தொகையை இருபத்தாறு பேர்களாகவும் உத்தியோகப் பற்றற்றவர்களின் தொகையைப் பதின்மூன்று பேர்களாகவும் மாற்றி விட்டிருக்கிறார். இதற்குக் காரணம் சொல்ல வேண்டுமல்லவா? ஒரு காரணமும் கண்டு பிடித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. சர்க்கார் இலாகாக்களின் தொகை இப்போது அதிகமாகியிருப்பதால், உத்தியோக அங்கத்தினர்களின் தொகையும் அதிகமாக வேண்டுமாம். இன்னும் ஒரு இருநூறு இலாகாக்களைப் புதிதாகச் சிருஷ்டித்து, அவற்றின் அதிகாரிகளையும் இந்திய சட்டசபைக்கு நியமித்து விட்டால், எல்லாக் கவலையும் ஒரேயடியாகத் தீர்ந்து விடும் என்று நாம் சர்க்காருக்கு ஆலோசனை கூறுகிறோம்.

## அவர்கள் செய்த சேவை

கடைசியில், தோழர் ஸ்டாலின் உயிரோடிருக்கிறார் என்பது நிச்சயமாக, சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெரிய வந்திருக்கிறது. இந்த மகா மர்மமான விஷயத்தை நமக்குத் தெரிவித்ததற்காக அமெரிக்க வெளிநாட்டு மந்திரி பிர்னஸுக்கும் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி பெவினுக்கும் நம்முடைய நன்றி உரியதாகுக. அந்நிய நாட்டு மந்திரிகள் மாஸ்கோவில் கூடியதற்குப் பத்திரிகைகள் என்னென்னவோ காரணங்களெல்லாம் சொல்லுகின்றன. ஆனால், உண்மைக் காரணம் என்னவென்பதில் நமக்குத் துளியும் சந்தேகமே இல்லை. ஸ்டாலின் உயிரோடு இருக்கிறாரா, இல்லையா என்பதைக் கண்டு பிடிப்பதற்காகவே அவர்கள் மாஸ்கோவில் கூடினார்கள்!

இன்னும், மாஸ்கோ மகாநாடு சரித்திரப் புகழ்பெற்றதோர் அற்புதமான காரியத்தைச் சாதித்திருக்கிறது.

அது என்னவெனில், மூன்று அயல் நாட்டு மந்திரிகளும் அமைதியாகவே கூடி அமைதியாகவே பிரிந்திருக்கிறார்கள்!

ஒருவேளை இது பரிகாசமாகத் தோன்றலாம். ஆனால், லண்டன் மகாநாட்டின் போக்கைக் கவனித்தவர்களுக்கு இதன் உண்மை தெரியும். லண்டன் மகாநாட்டிலே அடிபட்டு, முதுகில் காயமடைந்து திரும்பியவர்கள் இப்போது மீண்டும் சந்தோஷமாகக் கூடி சந்தோஷமாகவே பிரிந்திருக்கிறார்கள் என்றால், சமாதானத்திற்காக அவர்கள் இதைக் காட்டிலும் வேறு என்னதான் செய்ய வேண்டும்?

## கவலை வேண்டாம்!

இனி காங்கிரஸ் மகாசபைக்கு அவசியம் இல்லை. காந்திஜி, நேரு போன்ற தலைவர்களுக்கும் அவசியம் இல்லை. தேர்தல்களில் கலந்து கொள்ள வேண்டியதும் இல்லை. சுதந்திரத்தைப் பற்றி இனிமேல் எந்தப் பொது மேடையிலும்

பேச வேண்டியதில்லை. ஏனெனில், இந்திய சுதந்திரம் நமக்காக இன்னொரிடத்தில் தயாராகிக் கொண்டிருக்கிறது.

சென்ற முதல் தேதியன்று இந்தியா மந்திரி லார்ட் பெதிக் லாரென்ஸ் ரேடியோவில் பேசுகையில், இனிமேல் இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்கும்படியாக பிரிட்டனை யாரும் கண்டிக்க வேண்டியதில்லையென்று சொல்லி யிருக்கிறார்.

ஆனால், இதற்காக அவர் நம்மிடம் ஒரே ஒரு சின்ன உதவி மாத்திரம் கோருகிறார். அதாவது, ஒவ்வொரு வகுப்பிலுமுள்ள பிரபல இந்தியர்களுடைய ஒத்துழைப்பு அவருக்கு வேண்டுமாம். அதாவது ஜனாப் ஜின்னா, டாக்டர் அம்பேத்கர், பெரியார் ஈ. வெ. ரா. போன்றவர்களின் ஒத்துழைப்பையெல்லாம் கோருகிறார். அவர்கள் சிம்லா மகாநாட்டின் போது விலை மதிப்பதற்கரிய தங்கள் ஒத்துழைப்பையெல்லாம் தாராளமாக முன் வந்து கொடுத்தார்கள். ஆனால், அதன் விளைவு என்ன வாயிற்று என்பது எல்லோருக்கும் தெரியும். ஆகவே, சுதந்திரத்தைப் பற்றி இனி நமக்குக் கவலையே வேண்டியதில்லை. நாம் நிம்மதியாகத் தூங்கலாம்.

## புகழ் யாருக்கு?

காங்கிரஸ் மகாசபைக்கு அறுபது வயது பூர்த்தியாகி விட்டதற்காகத் தேசமெங்கும் வைர விழாக் கொண்டாடுகிறார்கள். அறுபது வருஷமாக இந்த ஸ்தாபனம் இவ்வளவு பேரும் புகழும் பெற்று வருவதற்குக் காரணம் யார் என்பதை ஆலோசிக்கும்போது நமக்கு ஆச்சரியம் உண்டாகிறது. ஆலன் அக்டோபர் ஹியூம்தான் காங்கிரஸைத் தோற்றுவித்தார் என்று சிலர் சொல்லுகிறார்கள். மகாத்மா காந்திதான் அதன் செல்வாக்குக் காரணம் என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள். ஆனால், உண்மை அதுவல்ல. பிரிட்டிஷ்காரர்கள் இந் நாட்டைக் கைப்பற்றி, அவ்வப்போது அடக்கு முறைகள் மூலம் நமக்குச் சுதந்திர ஆவேசத்தை உண்டாக்காதிருந்தால் நமக்குத் தேச பக்தி உண்டாகி யிருக்குமா? காங்கிரஸ் மகாசபைதான் தோன்றி யிருக்குமா? ஆகவே, நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், காங்கிரஸிற்குக் கிடைத்திருக்கும் புகழ் உண்மையில் பிரிட்டிஷ் சர்க்காருக்கே போய்ச் சேருகிறது. ஆனால், பிரிட்டிஷ் சர்க்கார் இன்னும் அதிகப் புகழடைவதற்கு ஒரு வழி இருக்கிறது. அது, இந்நாட்டின் அரசாங்கத்தைக் காங்கிரஸின் கையில் ஒப்படைத்துவிட்டு நடையைக் கட்டுவதுதான்.


டி. கே. எஸ். சகோதரர்களின்

நாடகம்



அவள் ஒரு தாசி; "காதல் ஒருவனைக் கைபிடித்து, அவன் காரியம் யாவினும் கை கொடுத்துப்" பெண்ணறம் பேண விரும்பினாள்; சமூகம் அதை அனுமதிக்கவில்லை; விபசாரக் கொடுமைக்குத் தன்னை அடிமைப் படுத்த விருப்பமின்றி கட்டற்ற ககன வெளியில் தன் உயிர்ப் பறவையைப் பறக்கவிட்டு விட்டாள்........!

இதுவே

முள்ளில் ரோஜா

(ப. நீலகண்டன் சிருஷ்டி)

★

திருச்சி

முனிசிபல் ஹாலில்

5-1-46 முதல்

மூன்றாவது வாரமாக நடைபெறுகிறது

அடுத்த முகாம் ....... கோவை

# கனவும் விழிப்பும்




1946-ம் வருஷம் உதயம்





தமிழ்நாட்டுக் காங்கிரஸில் 1945-ம் வருஷத்தில் நிலவிய சண்டை சச்சரவுகள் கனவாக மறைந்தன. 1946ம் வருஷ ஆரம்பத்தில் சமரசம் உதயமாகி இருக்கிறது.

ஒளி படைத்த கண்ணினாய் — வா வா வா!
உறுதி கொண்ட நெஞ்சினாய் — வா வா வா!
ஒற்றுமைக்குள் உய்யவே — நாடெல்லாம்
ஒரு பெருஞ் செயல் செய்வாய் — வா வா வா!

# வரவேற்கிறோம்



புதிய 1946-ம் வருஷத்தை மனமகிழ்ந்து வரவேற்கிறோம்.

இந்தப் புதிய வருஷம் தமிழ் நாட்டுக்கு மிகவும் நல்ல வருஷமாகவும் அதிர்ஷ்ட வருஷமாகவும் ஆரம்பமாகியிருக்கிறது.

சென்ற இதழின் தலையங்கத்தில் தமிழ் நாட்டின் ஒற்றுமையைக் கோரி நாம் செய்து கொண்ட வேண்டுகோள் மிக ஆச்சரியகரமான முறையில் நிறைவேறியிருக்கிறது.

புது வருஷம். வேற்றுமைகள் நீங்கிய ஒற்றுமைப் புது வருஷமாக ஆரம்பமாகியிருக்கிறது.

திருப்பரங்குன்றம் கூட்டத்தைப் பற்றி முதலில் வந்த செய்திகளைப் பார்த்து விட்டு, "புது அத்தியாயம்" ஆரம்பமாகி விட்டது என்று நாம் எழுதினோம். அப்படி எழுதியது அவசரப் பட்டு எழுதியதாக முடிந்தது.

பழைய சச்சரவு அத்தியாயம்தான் மேலும் தொடர்ந்து கொண்டிருந்தது.

நல்ல வேளையாக, தமிழ் நாட்டின் அதிர்ஷ்டவசமாக, சென்ற வருஷம் முடிவதற்குள்ளே தமிழ் நாட்டுக் காங்கிரஸிலிருந்த இரு பகுதிகளுக்குள்ளும் சமரசம் ஏற்பட்டு, அது அகில இந்தியத் தலைவர்களாலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ வல்லபாய் படேல் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவருக்கு அனுப்பிய பின்வரும் தந்தியில் சமரச முடிவு எத்தகையது என்பதும். மேலே நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றி ஸ்ரீ படேலின் விருப்பம் என்னவென்பதும் நன்கு வெளியாகின்றன :—

"உங்கள் தந்தி கிடைத்தது; ராஜாஜியைக் கலந்து கொண்டு, நீங்களும் ஸ்ரீ முத்துரங்க முதலியார், ராமசாமி செட்டியார் அவிநாசிலிங்கம் செட்டியார், சுப்பையா, முனிசாமிப் பிள்ளை, அண்ணாமலைப் பிள்ளை, ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி ஆகியோரும் அடங்கிய தேர்தல் போர்டு ஒன்றை அமைக்க நீங்கள் யோசித்திருப்பதையும், தேர்தல் வேலையின் ஒவ்வொரு கட்டத்திலும் ராஜாஜியைக் கலந்து காரியம் நடத்த நீங்கள் சம்மதித்திருப்பதையும் நான் ஒப்புக் கொள்கிறேன். மாகாணத்தின் அமைதியைக் குலைத்து வந்த தகராறு சுமுகமாகவும், சமரசமாகவும் தீர்ந்து விட்டதற்காக உங்களையும் சம்பந்தப்பட்ட அனைவர்களையும் பாராட்டுகிறேன். இந்த நெருக்கடியான சமயத்தில் நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில தமிழ்நாடு தனக்குரிய ஸ்தானத்தை வகிக்கக் கூடிய வகையில் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் மீண்டும் சாந்த சமாதானமும் சௌஜன்யமும் நிலைநாட்டப்படும் என்று நம்புகிறேன்."

நாமும் அப்படியே நம்புகிறோம். ததாஸ்து! ஆமென்!

• • •

ஸ்ரீ வல்லபாய் படேல் ஜனாப் ஆஸப் அலிக்கு அனுப்பிய அர்த்த புஷ்டியுள்ள தந்தியையும் நாம் கவனிக்க வேண்டும். அது பின் வருமாறு:—

"தமிழ்நாட்டுத் தகராறைச் சமரசமாகத் தீர்த்து வைப்பதில் நீங்கள் வெற்றி பெற்று விட்டது குறித்துச் சந்தோஷம். பத்திரிகை அறிக்கையைப் பார்க்கவும்."

ஸ்ரீ வல்லபாய் படேலுடன் சேர்ந்து நாமும் ஜனாப் ஆஸப் அலிக்கு வாழ்த்துக் கூறுகிறோம். அவருடைய சென்னை விஜயம் இவ்வளவு பரிபூரணமான பலன் அளித்திருப்பது பற்றி மிக்க மகிழ்ச்சியடைகிறோம்.

ஜனாப் ஆஸப் அலி சென்னையில் இருந்தபோது பல தடவை, "நான் எந்தக் கட்சியின் சார்பாகவும் வரவில்லை. ஒற்றுமையை உண்டு பண்ணவே வந்தேன்" என்று கூறினார். முக்கியமாக, ஒற்றுமை முயற்சியில்

தான் அவர் ஈடுபட்டிருந்தார். டில்லிக்குத் திரும்பிச் சென்ற பிறகும் ஜனப் ஆஸப் அலி தாம் சென்னைக்குச் சென்ற காரியத்தை மறக்காமல் ஸ்ரீ காமராஜ நாடாருக்கு, "என்னிடம் நேரில் சொன்னபடி ராஜாஜியைச் சந்தித்தீர்களா? ஒற்றுமையான முடிவு ஏற்பட்டு விட்டதா? காங்கிரஸ் அக்கிராசனருக்கு நான் ரிபோர்ட் செய்யவேண்டுமாதலால் உடனே தகவல் தெரிவிக்கவும்" என்று தந்தி அடித்திருந்தார்.



அரசியல் உலகில் சமரசத்துக்குப் பாடுபட்ட ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை

எனவே, தமிழ் நாட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஒற்றுமை ஏற்படுவதற்கு நேர் காரணமாயிருந்த ஜனப் ஆஸப் அலியின் விஜயத்துக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஜனப் ஆஸப் அலி சென்னைக்கு விஜயம் செய்வதற்கு மூல காரணமாயிருந்தது சீர்காழியில் சென்ற நவம்பர் 29உ கூடிய தமிழ் நாட்டுச் சமரச காங்கிரஸ் வாதிகளின் திருக்கூட்டமாகும். அந்தக் கூட்டத்துக்கும் தமிழ் நாடு பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

* * *

சமரச முறையில் இப்போது நியமிக்கப்பட்டிருக்கும் தமிழ் நாட்டுப் பார்லிமெண்டரி போர்டில் எட்டு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். இவர்களில் ஐந்து பேர் காங்கிரஸ் நிர்வாகக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். பாக்கி மூன்று பேர் ராஜாஜியை ஆதரித்த சமரச கோஷ்டியினர். தற்போதுள்ள தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் இரு கோஷ்டியாருக்கும் உள்ள எண்ணிக்கை விகிதாசாரத்தின்படி கணக்குப் பார்த்தால், சமரச கோஷ்டிக்கு நாலு ஸ்தானங்கள் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் ராஜாஜியும் சரி, அவரைச் சேர்ந்தவர்களும் சரி, எண்ணிக்கையைப் பொருட்படுத்தவில்லை. சமரச மனப்பான்மை உண்மையில் ஏற்பட்டுவிட்டதா என்பதைத்தான் முக்கியமாகக் கருதினார்கள்.

தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டியில் தற்போது மொத்தம் பதினைந்து அங்கத்தினர்கள் இருக்கின்றனர். இவர்களில் ஸ்ரீ சி. பி. சுப்பையா, ஸ்ரீ வி. ஐ. முனிசாமிப் பிள்ளை, ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை ஆகிய மூன்று பேர்தான் [illegible]ந்திலும் ராஜாஜியை ஆதரித்து நின்றவர்கள். இந்த மூன்று பேரையும் பார்லிமெண்டரி போர்டில் சேர்த்துக் கொண்டிருப்பது குறிப்பிட வேண்டிய விசேஷம். சமரச மனப்பான்மை ஏற்பட்டு விட்டதென்பதற்கு இது சிறந்த அறிகுறியாகும்.

மேலும், ராஜாஜியை எல்லாக் கட்டங்களிலும் கலந்துகொண்டு காரியம் செய்வதாக ஸ்ரீ காமராஜ நாடார் உறுதி கூறியிருப்பது சமரச மனப்பான்மைக்கு மிக முக்கியமான அறிகுறியாகும்.

"ராஜாஜியைக் கலந்து கொண்டு காரியம் செய்வது" என்றால், எல்லாவற்றிலும் ராஜாஜி சொல்லுகிறபடி காரியம் செய்வது என்று அர்த்தம் அல்ல. சில விஷயங்களில் ராஜாஜி சொல்வதை ஸ்ரீ காமராஜ் ஒப்புக் கொள்ளலாம்; இன்னும் சில விஷயங்களில் தாம் சொல்வதை ராஜாஜி ஒப்புக் கொள்ளும்படியும் செய்யலாம்.

சமரசம் என்பது பரஸ்பரம் விட்டுக் கொடுத்து ஒற்றுமைப்பட்டு வேலை செய்வதேயாகும்.

இந்த முறையை அனுஷ்டிப்பதாகத்தான் இப்போது ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. நாட்டின் நன்மைக்குச் சிறந்த வழியும் இதுதான் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் மேற்படி சமரச முறையை விரும்பாதவர்கள் சிலரும் இருக்கத்தான் இருப்பார்கள். ஜஸ்டிஸ் கட்சி—சு. ம. கட்சி மனோபாவத்துடன் காங்கிரஸில் இருப்பவர்களும், சுயநலப் பதவி மோக வேஷதாரிகளும், சண்டைக்காகவே சண்டை போடும் சுபாவத்தைப் பிறப்பிலேயே கொண்டு வந்திருப்பவர்களும் மேற்படி சமரச ஏற்பாட்டை எப்படியாவது உருப்படாமல் செய்ய வேண்டுமென்று விரும்புவார்கள். அதற்காகப் பழைய சம்பவங்களை அடிக்கடி ஞாபக மூட்டியும், வெற்றி தோல்விகளைப் பற்றிப் பேசியும் இடைவிடாத பிரயத்தனம் செய்வார்கள். தமிழ் நாட்டுக் காங்கிரஸின் மிகப் பெரும்பாலோராயுள்ள உண்மை

யான தேசபக்தர்கள் மேற்படி நிய பிரயத்தனங்களுக்கு இடம் கொடுக்கக் கூடாது. 1945-ம் வருஷத்துச் சச்சரவுகளை அந்த வருஷத்தோடு மறந்து மேலே நடக்க வேண்டிய காரியங்களை ஒருமுகமாக நடத்துவதற்கே அவர்கள் பாடுபட வேண்டும். இடைவிடாமல் அவ்விதம் பாடுபட்டு, சண்டைக்காரர்களையும் கலகம் மூட்டுவோரையும் ஒதுக்குவதற்குப் பார்க்க வேண்டும்.

இப்படிச் செய்தால்தான் ஸ்ரீ வல்லபாய் படேலின் விருப்பமும் நம்பிக்கையும் பூரணமாக நிறைவேறும். அதாவது, தமிழ் நாடு தேசிய சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நிற்கும்.

மாகாண பார்லிமெண்டரி போர்டு அமைக்கும் பொறுப்பு மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்கா அல்லது அகில இந்தியக் காரியக் கமிட்டிக்கா என்பது பற்றிய அனாவசியமான ஒரு விவாதத்தை நமது ஆந்திர கேஸரி ஸ்ரீ டி. பிரகாசம் அவர்கள் கிளப்பி விட்டு நிலைமையை மேலும் குழப்பப் பார்த்தார்.

மாகாண பார்லிமெண்டரி போர்டை நியமிக்கும் அதிகாரம் சாதாரணமாக மாகாணக் காங்கிரஸ் கமிட்டிக்குத்தான் உண்டு. ஆனால் தேசத்தில் நடக்கும் எல்லாக் காங்கிரஸ் வேலைகளுக்கும் முடிவான பொறுப்பு அகில இந்தியக் காரியக் கமிட்டியைச் சேர்ந்ததாகும்.

மாகாணக் கமிட்டி தவறுகள் செய்தால், அந்தத் தவறுகளைத் திருத்தும் உரிமையும் கடமையும் அகில இந்தியக் காரியக் கமிட்டிக்குக் கட்டாயம் உண்டு.

மாகாணக் கமிட்டியில் உள்ள ஒரு பெரிய பகுதியாரை அடியோடு விலக்கிவிட்டு நிர்வாக பதவியிலுள்ளவர்கள் காரியம் செய்ய யத்தனித்தால், அத்தகைய அநீதியைத் தடுப்பதற்கு அகில இந்தியக் கமிட்டிக்கு எப்படி உரிமை இல்லாமல் போகும்? அத்தகைய உரிமை இல்லாமற் போனால், காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தேசிய மகா சபை என்று சொல்வது தகாது.



சங்கீத உலகின் ஒற்றுமைக்கு அடிகோலிய
ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர்

எனினும், அகில இந்தியக் கமிட்டியார் மேற்கண்டவாறு தங்கள் உரிமையை உபயோகப் படுத்துவதற்கு அவசியம் நேராமல் பார்த்துக் கொள்வதுதான் ஒரு மாகாணக் கமிட்டிக்குப் பெருமை தருவதாகும்.

வங்காள மாகாணத்தின் விஷயத்தில் மத்திய பார்லிமெண்டரி போர்டார் தலையிட்டு அம் மாகாணத்துக்குப் பார்லிமெண்டரி போர்டு அமைத்த விஷயம் சில நாளைக்கு முன் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது.

அந்த மாதிரி அவசியம் தமிழ் நாட்டில் ஏற்படவில்லையென்பதும், இங்கே நமக்குள் ஏற்பட்டிருந்த வேற்றுமையை நாமே தீர்த்துக் கொண்டோம் என்பதும் மிகவும் பெருமை கொள்ளத்தக்க விஷயமாகும். இந்தப் பெருமைக்கு எவ்விதத்திலும் வருங்காலத்தில் பங்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்வது மிகவும் அவசியம்.

* * *

புது வருஷ ஆரம்பத்தில் தமிழகத்தில் அரசியல் சமரசமும் அமைதியும் ஏற்பட்டிருப்பதைப் போலவே, தமிழ்க் கலை உலகத்திலும் சமரசத்தை நிலைநாட்டக்கூடிய விசேஷ சம்பவம் ஒன்று நடந்திருக்கிறது.

சென்ற நாலு வருஷ காலமாகத் தமிழ் நாட்டில் தமிழிசை இயக்கம் சம்பந்தமாக ஓர் அனாவசியமான சச்சரவு நடைபெற்றுக்கொண்டிருந்தது.

முக்கியமாக, வருஷந்தோறும் டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீத விழாக்களின் தொடக்கத்தில் மேற்படி விவாத விழாவும் ஆரம்பமாகும். "தமிழில் நல்ல கீர்த்தனங்கள் இல்லை; தமிழ் மொழி சங்கீதத்துக்கு உகந்தது அல்ல" என்னும் பல்லவிகளை மியூஸிக் அகாடமி பிரசங்கிகள் பாடுவார்கள்.

"அப்படிச் சொல்வது அபத்தம்" என்று தமிழிசைக்காரர்கள் அநுபல்லவி பாடுவார்கள்.

இந்த விவாதம் கொஞ்ச காலம் தொடர்ந்து நடந்து ஒருவாறு அடங்கும் சமயத்தில், யாராவது ஒருவர் மறுபடியும், "தமிழிசை இயக்கத்தினால் கர்நாடக சங்கீதம் அழிந்து போகும்!" என்று சொல்லி வைப்பார். உடனே மறுபடியும் பழைய கதையேதான்.



டிசம்பர் 31-ல இரவு வேலூர் காந்தி மைதானத்தில் பதினையாயிரம் ஜனங்கள் கொட்டுகிற பனியில் உட்கார்ந்து ராஜாஜியின் பேச்சை ஆவலுடன் கேட்டனர்.

---

நாளது 1946-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி, தமிழிசை மகா நாட்டுச் சங்கீத விழாவில் சங்கீத கலாநிதி ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் கச்சேரி செய்ததின் மூலம் மேற்படி வேண்டாத விவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து முடிவு செய்திருக்கிறார்.

கர்நாடக சங்கீத உலகில் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் வகித்து வரும் ஸ்தானம் அனைவரும் அறிந்ததே. மியூஸிக் அகாடமி மகாநாட்டில் அவர் அக்கிராசனம் வகித்துச் 'சங்கீத கலாநிதி' பட்டம் பெற்றவர். திருவையாற்றில் நடைபெறும் ஸ்ரீ சற்குரு தியாகராஜ ஆராதனை சபையின் காரியதரிசி.

திருவையாற்றில் மேற்படி தியாகராஜ ஆராதனை உற்சவம் சம்பந்தமாக நீண்ட நாளாகப் பெரிய கட்சி—சின்னக் கட்சி என்று இருந்து வந்த பிளவை நீக்கிச் சங்கீத வித்வான்களுக்குள் ஒற்றுமை உண்டாக்கியவர் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர்தான்.

தமிழ் நாட்டுச் சங்கீத ரஸிகர்களிடையே ஏற்பட்டிருந்த சச்சரவு நீங்கிச் சமரசம் நிலை பெறுவதற்கும் அவரே காரணமாகியிருப்பது குறித்துப் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

இவ்விதம் சமரசம் ஏற்பட்டு விடுவதை விரும்பாத சண்டைப் பிரியர்கள் சங்கீத உலகத்திலும் சிலர் உண்டு. அவர்கள் மறுபடியும் ஏதாவது விவாதத்தைக் கிளப்பி விட்டுக் கொண்டிருப்பார்கள். அதையெல்லாம் இனி நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

தமிழிசையைக் கோருகிற சபைகளில் வித்வான்கள் தமிழ்க் கீர்த்தனங்கள் பாடட்டும். தியாகராஜர், தீக்ஷிதர் கீர்த்தனங்களைக் கேட்க விருப்பமுள்ள சபைகளில் அந்தப் பெரியார்களின் கீர்த்தனங்களைப் பாடட்டும். பொதுவான சபைகளில் தமிழ்க் கீர்த்தனங்களையும் மற்ற பாஷைக் கீர்த்தனங்களையும் கலந்து பாடட்டும்.

இவ்விதம் பொதுஜன அபிப்பிராயத்துக்கும் அந்தந்தச் சபையின் அபிப்பிராயத்துக்கும் மதிப்புக் கொடுத்து நமது சங்கீத வித்வான்கள் கச்சேரி செய்யும் பட்சத்தில் எவ்விதச் சண்டை சச்சரவுக்கும் இடமில்லாமலே போய் விடும். வெறும் சண்டைப் பிரியர்கள் தனித்து நிற்கும்படி நேரிடும்.

* * *

அரசியல் துறையிலும், இசைத் துறையிலும் போலவே தமிழகத்தின் எல்லா வாழ்க்கைத் துறைகளிலும் புது வருஷத்தில் சமரசம் நிலவ வேண்டுமென்று விரும்புகிறோம். சமரச அடிப்படையின் மீது செந்தமிழ்நாடு எல்லாத் துறைகளிலும் முன்னேறிப் பாரத நாட்டிலேயே சிறந்து விளங்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.



# சீகாழி சமரசக் கூட்டம்

சென்ற நவம்பர் 29உ சீகாழியில் கூடிய சமரச காங்கிரஸ் வாதிகளின் கூட்டம் சரித்திரப் பிரசித்தி பெற்று விட்டது என்று சொல்ல வேண்டும். அந்தக் கூட்டத்தின் பயனாகவே கல்கத்தாவுக்குத் தூது கோஷ்டி சென்றது. அதன் பயனாக ஜனாப் ஆஸப் அலி வந்தார். அவருடைய விஜயத்திலிருந்து தமிழ் நாட்டுக் காங்கிரஸ் வாதிகளுக்குள்ளே சமரசத்துக்கும் ஒற்றுமைக்கும் வழி பிறந்தது.

மேற்படி கூட்டத்துக்குத் தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ராஜாஜியின் தலைமையில் பூரண நம்பிக்கை கொண்ட காங்கிரஸ் பிரமுகர்களும் தொண்டர்களும் சுமார் 150 பேர் வந்திருந்தார்கள். அவர்களில் 1920-ம் வருஷத்து ஒத்துழையாமை இயக்கத்திலிருந்து காங்கிரஸ் தொண்டில் ஈடுபட்டவர்களும், உப்பு சத்தியாக்கிரஹ வீரர்களும், ஆகஸ்டு தியாகிகளும் இருந்தார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும், மாகாண காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும், ஜில்லா தாலுகா காங்கிரஸ் கமிட்டிகளின் அக்கிராசனர்களும் காரியதரிசிகளும் அங்கத்தினர்களும் இருந்தார்கள்.

அவர்களில் ஏறக் குறைய 100 பேரை மேலேயுள்ள படத்தில் காணலாம். மேல் வரிசையின் நடுவிலுள்ள புகைக்கண்ணாடி அணிந்த முகத்தைச் சுலபமாக அடையாளம் கண்டு பிடிக்க முடியும். இன்னும், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், ஸ்ரீமான்கள் சி. பி. சுப்பையா, என். அண்ணாமலைப் பிள்ளை, மட்டப்பாறை வெங்கட்ராமய்யர், ஏ. வேதரத்தினம் பிள்ளை, முனகலா பட்டாபிராமய்யா, எம். சி. வீரபாகுப் பிள்ளை, கே. வெங்கடசாமி நாயுடு, சிவஞான கிராமணி, பி ரத்தினவேலு தேவர், எல். கிருஷ்ணசாமி பாரதி, எல். ரகுராஜ பாரதி, ஆர். டி. பி. சுப்பிரமணிய நாடார், சிதம்பரம் கோவிந்தசாமிப் படையாச்சி, சேலம் ஏ. சுப்பிரமணியம், சி. பெருமாள்சாமி ரெட்டியார், வேலூர் ஏ. குப்புசாமி முதலியார், ஆரணி சீனிவாச ராவ், கே. ஆர். கல்யாண ராமய்யர், வி. ஐ. முனிசாமிப் பிள்ளை, சந்தான ராமஸ்வாமி உடையார். துரைசாமி நாடார், கே. சுப்பீ, ஜி. வேலப்ப நாயுடு, வி. என். ரங்கநாதன், உஸ்மான் சாகிபு, அப்துல் காதர் சாகிபு ஆகியவர்களை இனங்கண்டு பிடிக்க முடிகிறதா என்று பாருங்கள்.

மேற்படி சீகாழி மகாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளுக்கு வேண்டிய ஜாகை வசதி, உணவு வசதி, வண்டி வசதி ஆகியவை யாதொரு குறைவும் இல்லாமல் செய்து கொடுத்த கடைக்கா நல்லூர் மிராசுதார் ஸ்ரீ மருதநாயகம் பிள்ளை அவர்களுக்கும், சீகாழி தாலுகா காங்கிரஸ் கமிட்டி அக்கிராசனர், காரியதரிசிகள் ஸ்ரீ கோவிந்தசாமிப் பிள்ளை, ஸ்ரீ சுப்பிரமணியப் பிள்ளை, பிரபல காங்கிரஸ் ஊழியர் ஸ்ரீ சௌந்தரராஜய்யங்கார் ஆகியவர்களுக்கும் மேற்படி சமரச கைங்கரியத்தில் பெரிய பங்கு சேர வேண்டும்.

புயலும் மழையும் அடித்தாலும் நிலை பெயராத மலையைப்போல் ராஜாஜி தமிழ்நாட்டில் விளங்குவதைக் கண்டு கொண்டு ஜனப் ஆஸப் அலி திரும்பிச் சென்றார்.




# திருவள்ளுவர் சொன்னார்

சென்ற இதழில் வெளியாகியிருந்த மேற்படி கார்ட்டூன் சித்திரத்தைப் பார்த்த தமிழறிஞர் ஒருவர், "இதே விஷயத்தை இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார்!" என்று கூறினார். அவர் குறிப்பிட்ட குறள் பின்வருமாறு:—

"நிலையிற் றிரியா(து) அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது."

புயலும் மழையும் மலையைத் தாக்கு தாக்கென்று தாக்குகின்றன. மலை அவற்றைத் திருப்பித் தாக்குவதில்லை. ஆனால் தன் நிலையிலிருந்து அது அணுவளவும் பிறழுவதுமில்லை. இது ஒரு அதிசயமான காட்சி.

இதைக் காட்டிலும் அதிசயமான இன்னொரு காட்சியும் இருக்கிறது. பெரியோர் சில சமயம் தூற்றப்படுகிறார்கள்; தாக்கப் படுகிறார்கள். அவர்கள் மீது வசைமாரி பொழிகிறது; குரோதப் புயல் அவர்களைத் தாக்குகிறது. இதனாலெல்லாம் அந்தப் பெரியோர்கள் பொறுமை யிழந்து விடுவதில்லை. தங்களைத் தாக்குவோரைத் திருப்பித் தாக்குவதுமில்லை. அடக்கத்துடன் பொறுத்திருக்கிறார்கள். ஆனால் தாங்கள் எடுத்த காரியத்திலிருந்தும் கைக்கொண்ட கொள்கையிலிருந்தும் அணுவளவாவது அசைகிறார்களா என்றால், அதுதான் கிடையாது.

"சத்தியாக்கிரஹத்தில் நிலைத்த ராஜாஜியைப் போன்ற பெரியோர்களைப் பற்றித்தான் திருவள்ளுவர் அவ்விதம் கூறினார். திருவள்ளுவர் குறளுக்குச் சரியான உதாரணம் இந்த நாளில் ராஜாஜிதான்!" என்று மேற்படி தமிழறிஞர் தெரிவித்தார். சந்தேகம் என்ன?



மேலே: ஒரு காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியின் கோட்டை என்று கருதப்பட்ட சென்னை நகரின் வடக்குப் பகுதி இப்போது காங்கிரஸ் கோட்டையாக விளங்கி வருகிறது. இந்த மகத்தான மாறுதலுக்குக் காரணமான சென்னை ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ சிவஞான கிராமணியாரும் அவருடன் ஒத்துழைத்து வேலை செய்யும் ஸ்ரீ வரதராஜுலு முதலிய சகாக்களையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

கீழே: சென்ற 9—12—45ல் வடசென்னை காந்திஜி தேசிய வாலிபர் சங்கத்தின் திறப்பு விழா ராஜாஜியின் தலைமையில் நடைபெற்றது. அச்சமயம் காந்திஜியின் திருவுருவப்படத்தை யானை மீது ஏற்றி வைத்து ஜனத்திரளின் குதூகல ஆரவாரத்துக்கிடையே ஊர்வலம் விட்ட காட்சி.



# சிவகாமியின் சபதம்

கல்கி

அத்தியாயம் 13

## அகக் கண் காட்சி

திகம்பர சமணரால் வழிகாட்டப் பெற்று நெடுமாறன் குகைக்குள்ளே நுழைந்தபோது, உள்ளிருந்து வந்த தூபப் புகையின் வாசனை அவனுடைய தலை கிறுகிறுக்கச் செய்தது. மெதுவாகச் சமாளித்துக் கொண்டு உள்ளே சென்றான். சிறிது தூரம் சென்றதும் தென்பட்ட விசாலமான குகை மண்டபத்தில் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான். தீபஸ்தம்பத்தின் மீதிருந்த பெரிய அகல் விளக்கில் தீபம் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஒரு பக்கத்தில் வைத்திருந்த பாத்திரத்திலிருந்து தூபப் புகை வந்து கொண்டிருந்தது. தீபத்தின் வெளிச்சமும் தூபத்தின் புகையும் சேர்ந்து அங்கே தோன்றிய காட்சியை ஏதோ ஒரு மாயா லோகத்தின் கனவுக் காட்சியாகத் தோன்றும்படி செய்தது. நெடுமாறன் சற்று உற்றுப் பார்த்த பிறகு, காட்சி சிறிது தெளிவடைந்து காணப்பட்டது. பத்துப் பன்னிரண்டு திகம்பர சமணர்கள் வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஏதோ ஒரு மந்திரத்தை ஒரே குரலில் ஒரே விதமாக ஜபித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் உடுக்குப் போன்ற ஒரு வாத்தியத்தைக் கையிலே வைத்து முழக்கிக் கொண்டிருந்தார். மற்றொருவர் பல தந்திகள் உள்ள ஒரு முழ நீள வீணையைக் கையில் வைத்துக் கொண்டு அதன் நரம்புகளை விரலினால் தட்டிக் கொண்டிருந்தார். இந்த இரண்டு நாதங்களும் சேர்ந்துதான் 'தரிரிம்' 'தரிரிம்' என்ற ஒலியைக் கிளப்பி நெடுமாறன் உடம்பிலுள்ள நரம்புகளையெல்லாம் புடைத்தெழச் செய்தன.

வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்த சமணர்களுக்கு நடுவில் ஏறக்குறையப் பதினாறு வயதுள்ள ஒரு சிறுவன் காணப்பட்டான். மேற்படி மந்திர உச்சாடனத்துக்கும் வாத்தியங்களின் ஒலிக்கும் இசைய அவனுடைய தேகம் இலேசாக ஆடிக் கொண்டிருந்தது. அவனுடைய கண்களோ முக்கால் பங்கு மூடியிருந்தன. கண்கள் திறந்திருந்த அளவில் வெள்ளை விழி மட்டும் தெரிந்தபடியால், முகம் பயங்கரத் தோற்றத்தை அளித்தது.

நெடுமாறனை அழைத்து வந்த சமண முனிவர் அவனை நோக்கிச் சமிக்ஞை செய்து, எதுவும் பேச வேண்டாமென்றும் சத்தம் செய்யாமல் உட்காரும்படியும் தெரிவித்தார்.

நெடுமாறன் அவ்விதமே சத்தம் செய்யாமல் உட்கார்ந்தான்.

மந்திர உச்சாடனம், வாத்திய முழக்கம் ஆகியவற்றின் வேகம் வரவர அதிகரித்து வந்தது. திகம்பர மண்டலத்துக்கு மத்தியிலிருந்த சிறுவனுடைய உடம்பின் ஆட்டமும் விரைவாகிக் கொண்டு வந்தது.

திடீரென்று மந்திர உச்சாடனமும் வாத்திய முழக்கமும் நின்றன.

சிறுவன் 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு தரையில் சாய்ந்தான்.

சற்று நேரம் அந்தக் குகை மண்டபத்தில் ஒரு பயங்கர நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

கட்டையைப் போல் கீழே கிடந்த சிறுவனின் கண்ணிமைகளும் உதடுகளும் இலேசாகத் துடித்தன.

கையில் வீணை வைத்துக் கொண்டிருந்த சமணர் அதன் ஒற்றை நரம்பை இலேசாகத் தட்டி விட்டு, "தம்பி! என் குரல் உனக்குக் கேட்கிறதா?" என்று வினவினார்.

"கேட்கிறது, சுவாமி!" என்று அந்தச் சிறுவனின் உதடுகள் முணுமுணுத்தன.

"அப்படியானால், நான் கேட்கிற கேள்விகளுக்கு விடை சொல். சற்று முன்னால் நீ இருந்த இடத்துக்கும் இப்போதுள்ள இடத்துக்கும் ஏதேனும் வித்தியாசம் தெரிகிறதா?"

"சற்று முன்னால் நான் மலைக் குகையில் தரையில் கிடந்தேன். இப்போது ஆகாச வெளியில் மிதந்து கொண்டிருக்கிறேன். ஆகாச வெளியில் நினைத்த நினைத்த இடத்துக்கெல்லாம் போகக்கூடியவனாயிருக்கிறேன்."

"நீ மிதக்கும் இடத்தில் உன்னைச் சுற்றிலும் என்ன பார்க்கிறாய், தம்பி!"

"என்னைச் சுற்றிலும் திரள் திரளாகப் புகை மண்டலங்கள் காணப்படுகின்றன. அந்தப் புகை மண்டலங்களுக்குள்ளே எத்தனை எத்தனையோ உருவங்கள் மங்கலாகக் காணப்படுகின்றன. அவை மறைந்து மறைந்து திரும்பத் தோன்றிக் கொண்டிருக்கின்றன."

"தம்பி! நீ நிற்கும் இடத்திலேயே நிற்க வேண்டுமா? முன்னாலும் பின்னாலும் உன்னால் போகக் கூடுமா?"

"முன்னாலும் பின்னாலும் மேலேயும் கீழேயும் நாலு திசைகளிலும் நினைத்தபடியெல்லாம் நான் போகக் கூடியவனாயிருக்கிறேன்."

சிறுவனிடம் மேற்படி கேள்விகளைக் கேட்ட சமணர் நெடுமாறனை நோக்கி, "பாண்டிய குமாரா! இந்தப்பிள்ளை இப்போது ரிஷப தேவரின் அருள் மகிமையினால் அகக் காட்சி பெற்றிருக்கிறான். இதற்கு முன் இருபதாயிரம் ஆண்டு காலத்தில் நடந்தவைகளையும், இனிமேல் இருபதினாயிரம் ஆண்டு காலத்தில் நடக்கப் போகும் சம்பவங்களையும் இவனால் நேருக்குநேர் கண்டு சொல்ல முடியும்! தங்களுக்கு ஏதாவது தெரிந்து கொள்ள வேண்டுமா?"

நெடுமாறன் சற்றுத் தயங்கினான். வருங்காலத்தை மறைத்துக் கொண்டிருக்கும் மேகத்திரையை விலக்கிக் கொண்டு எதிர்கால சம்பவங்களைத் தான் பார்க்கவேண்டியது அவசியந்தானா? அப்படிப் பார்ப்பதினால் ஏதேனும் விபரீதம் ஏற்படுமா? ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் அந்த மந்திரக் குகையிலிருந்து உடனே எழுந்து போய் விடலாமா?

மனதில் இப்படி நெடுமாறன் எண்ணினானே தவிர, அவனை அங்கிருந்து எழுந்துபோக விடாமல் ஏதோ ஒரு சக்தி தடுத்து, அவனை அங்கேயே பலமாக இறுத்திக் கொண்டிருந்தது.

"ஆம், அடிகளே! வாதாபி யுத்த முடிவைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்" என்ற வார்த்தைகள் நெடுமாறன் வாயிலிருந்து தாமே வெளி வந்தன.

உடனே, சமணர் தரையில் கிடந்த சிறுவனை நோக்கி, "தம்பி! கொஞ்சம் வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்து அங்கே என்ன பார்க்கிறாய் என்று சொல்லு!" என்றார்.

"ஆகட்டும், சுவாமி! இதோ வட திசை நோக்கிப் போகிறேன்!" என்றான் சிறுவன்.

சற்றுப் பொறுத்து, "ஆ! என்ன பயங்கரம்!" என்றான்.

"தம்பி! அங்கே என்ன பயங்கரமான காட்சியை நீ பார்க்கிறாய்?" என்று சமணர் கேட்டார்.

"ஆகா! மிகப் பயங்கரமான யுத்தம் நடக்கிறது. கணக்கிலடங்காத வீரர்கள் வாள்களாலும் வேல்களாலும் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டு செத்து விழுகிறார்கள். எங்கே பார்த்தாலும் இரத்த வெள்ளம் ஆறாக ஓடுகிறது. பெரிய பெரிய பிரம்மாண்டமான யானைகள் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு ஒன்றையொன்று தாக்குகின்றன. யுத்தம் ஒரு பெரிய பிரம்மாண்டமான கோட்டை மதிலுக்குப் பக்கத்தில் நடக்கிறது. கோட்டையின் பிரதான வாசலில் ஒரு பெரிய கொடி பறக்கிறது. அந்தக் கொடியில் வராகத்தின் உருவம் பொறித்திருக்கிறது! ஆகா! கோட்டைக் கதவு இதோ திறக்கிறது! கணக்கற்ற வீரர்கள் கோட்டைக்குள்ளேயிருந்து வெளியே வருகிறார்கள். ஆ! யுத்தம் இன்னும் கோரமாக நடக்கிறது. சாவுக்குக் கணக்கேயில்லை. கண்ணுக் கெட்டிய

ரம் ஒரே பிணக்காடு! அம்மம்மா! ர்க்கவே முடியவில்லை..."

சிறுவனுடைய கண்ணிமைகள் அப்போது இலேசாகத் துடித்ததைப் பார்த்த சமண குரு, "தம்பி! பயப்படாதே! உனக்கு ஒன்றும் நேராது. இன்னும் சிறிது உற்றுப் பார். போர்க்களம் முழுவதும் பார்த்து, மிகவும் நெருக்கமான சண்டை எங்கே நடக்கிறதென்று கவனி!" என்றார்.

"ஆம், ஆம்! அதோ ஓரிடத்தில் ரமாதமான கைகலந்த சண்டை டக்கிறது. குதிரை மேல் ஏறிய ரன் ஒருவன் இரண்டு கையிலும் இரண்டு வாள்கள் ஏந்திப் பயங்கரப் போர் புரிகிறான். அவனைச் சுற்றிலும் திரிகள் சூழ்ந்து கொண்டு தாக்கு றார்கள். அவன் தன்னந்தனியாக ன்று அவ்வளவு பேரையும் திருப்பித் க்குகிறான். அவனுடைய கை ள்கள் அடிக்கடி மின்னலைப்போல் ஜொலிக்கின்றன. ஒவ்வொரு வாள் ச்சுக்கும் ஒரு தலை உருளு றது. ஆகா! இதோ அந்த வீர னுக்குத் துணையாக இன்னும் சில ரர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு டுவில் மீனக்கொடி பறக்கிறது. நெடுமாற பாண்டியர் வாழ்க! வாதாபி லிகேசி வீழ்க!' என்று அவர்கள் ர்ஜித்துக் கொண்டு எதிரிகள் மீது ாய்கிறார்கள்......"

இப்படி அந்தச் சிறுவன் சொன்ன போது, இதுவரை சிறிது அலட்சிய ாவத்துடனேயே கேட்டுக் கொண்டு ந்த நெடுமாறன் திடுக்கிட்டு நிமிர்ந்து ட்கார்ந்தான். மேலே என்ன நடக் ப் போகிறது என்று தெரிந்து கொள் தில் அவனுக்கு அப்போது அளவில் ாத பரபரப்பு உண்டாயிற்று.

மறுபடியும் சிறிது நேரம் சிறுவன் பசாந்திருந்தான். சமண குரு மீண்டும் வனைத் தூண்டினார். மேலே என்ன டக்கிறது என்று நன்றாகப் பார்த்துக் றும்படி ஆக்ஞாபித்தார்.

"ஆகா! சண்டை முடிந்து விட்டது. திரிகள் எல்லாரும் செத்து விழுந்து ட்டார்கள். வெற்றியடைந்த ரர்கள் அந்த அசகாய சூரனைச் ழ்ந்து கொண்டு 'மீனக்கொடி ாழ்க! நெடுமாற பாண்டியர் நீடூழி ாழ்க!' என்று கோஷிக்கிறார்கள். ஆகா! அவர்களுடைய கோஷமும் ஜயபேரிகைகளின் முழக்கமும் சேர்ந்து காது செவிடுபடச் செய்கின்றன!......

அதோ இன்னொரு வீரர் கும்பல் வருகிறது. அந்தக் கும்பலின் நடுவில் ஒரு ரதம் காணப்படுகிறது. ரதத்தின் மேல் ரிஷபக்கொடி பறக்கிறது. ரதத்தில் கம்பீர வடிவமுள்ள ஒருவர் வீற்றிருக்கிறார். அவருடைய முகத்தில் குரோதம் கொதித்துக் கொண்டிருக்கிறது. இந்த ரதத்தைச் சூழ்ந்து வரும் வீரர்கள் 'மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க!' என்று கோஷம் செய்கிறார்கள். ஆனால் அவர்களுடைய கோஷத்தில் அவ்வளவு சக்தி இல்லை. இரண்டு கூட்டமும் சந்திக்கிறது. ரதத்தில் வந்தவரும் குதிரை மேலிருந்தவரும் ஒருவரை யொருவர் பார்க்கிறார்கள். இரண்டு பேரும் கீழே இறங்குகிறார்கள். சமீபத்தில் வருகிறார்கள். மீனக்கொடிக்குரிய வீரர், ரிஷபக்கொடிக்கு உரியவரைப் பார்த்து, 'மாமல்லரே! பகைவர்கள் ஒழிந்தார்கள்; புலிகேசி இறந்தான்; வாதாபிக் கோட்டை நம் வசமாகி விட்டது. இனிமேல் தங்கள் காரியம். நான் போக விடை கொடுங்கள்!' என்று கேட்கிறார். ஐயோ! ரிஷபக் கொடியாரின் முகத்தில் குரோதம் தாண்டவமாடுகிறது. அவர் 'அடே பாண்டியப் பதரே! எனக்கு வரவேண்டிய புகழை யெல்லாம் நீ கொண்டு போய் விட்டாயல்லவா?" என்று சொல்லிக் கொண்டே உடைவாளை உருவுகிறார். மீனக்கொடியார், 'வேண்டாம், சக்கரவர்த்தி! வேண்டாம்! நமக்குள் எதற்காகச் சண்டை?' என்கிறார். ரிஷபக் கொடியார் அதைக் கேட்காமல் உடைவாளை வீசுகிறார். ஐயையோ!......"

கேட்டவர்களின் ரோமம் சிலிர்க்கச் செய்த 'வீல்' சத்தத்துடன், இத்தனை நேரமும் தரையில் படுத்துக் கிடந்த சிறுவன் எழுந்து உட்கார்ந்தான். பீதியும் வெருட்சியும் நிறைந்த கண்களை அகலமாகத் திறந்து சுற்றிலும் பார்த்துத் திறு திறு வென்று விழித்தான்.

நெடுமாற பாண்டியன் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. சமண முனியைப் பார்த்து "அப்புறம் நடந்த



தைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? முக்கியமான தருணத்தில் எழுந்து விட்டானே?" என்று கேட்டான்.

"இளவரசே! இன்றைக்கு இவ்வளவுதான். மறுபடி இன்றிரவு இவனை அகக் காட்சி காணும்படி செய்ய முடியாது. பிறகு நடந்ததைத் தெரிந்து கொள்ள விரும்பினால நாளைக்குத் தாங்கள் திரும்பவும் இவ்விடத்துக்கு வந்தாக வேண்டும்!" என்றார்.

## அத்தியாயம் 14

## படை கிளம்பல்

**ம**று நாள் விஜயதசமி அன்று காலையில் வழக்கம்போல் கீழ்த் திசையில் உதயமான சூரியன், காஞ்சிமா நகரம் அன்றளித்த அசாதாரணக் காட்சியைக் கண்டு சற்றுத் திகைத்துப் போய் நின்ற இடத்திலேயே நின்றதாகக் காணப்பட்டது.

பூர்விகப் பெருமை வாய்ந்த பல்லவ அரண்மனை வாசலில் நின்று மாமல்ல சக்கரவர்த்தி யாத்ராதானம், கிரகப்



பிரீதி ஆகிய சடங்குகளைச் செய்து விட்டு, குலகுரு ருத்ராச்சாரியார் முதலிய பெரியோர்களின் ஆசி பெற்று, தாயார் புவனமகா தேவியிடமும் பட்டமகிஷி வானமா தேவியிடமும் விடை பெற்றுக் கொண்டு, பட்டத்துப் போர் யானையின் மீது ஏறிப் போர் முனைக்குப் புறப்பட்டார். அப்போது காஞ்சி நகரத்தின் மாட மாளிகைகளெல்லாம் அதிரும்படியாகவும், மண்டபங்களிலெல்லாம் எதிரொலி கிளம்பும்படியாகவும் அநேக போர் முரசுகளும் சங்கங்களும் எக்காளங்களும் ஆர்த்து முழங்கின.

சக்கரவர்த்தி ஏறிய பட்டத்து யானைக்கு முன்னாலும் பின்னாலும் அணி அணியாக நின்ற யானைகளும் குதிரைகளும் ரதங்களும் ஏககாலத்தில் நகரத் தொடங்கிக் காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசலை நோக்கிச் செல்லத் தொடங்கின.

இந்த ஊர்வலம் காஞ்சியின் இராஜ வீதிகளின் வழியாகச் சென்றபோது இருபுறத்திலும் இருந்த மாளிகை மேன்மாடங்களிலிருந்து பூரண சந்திரனையும் பொன்னிறத் தாமரையையும் ஒத்த முகங்களையுடைய பெண் மணிகள் பலவகைப்பட்ட நறுமலர்களையும் மஞ்சள் கலந்த அட்சதையையும் சக்கரவர்த்தியின் மீது தூவி 'ஜய விஜயீபவா!' என்று மங்கள வாழ்த்துக் கூறினார்கள்.

இப்படி நகர மாந்தரால் குதூகலமாக வழி அனுப்பப்பட்ட சக்கரவர்த்தியின் போர்க்கோல ஊர்வலம் ஒரு முகூர்த்த காலத்தில் வடக்குக் கோட்டை வாசலை அடைந்தது. நன்கு திறந்திருந்த கோட்டை வாசல் வழியாகப் பார்க்கும்போது கோட்டைக்கு வெளியிலே சற்றுத் தூரத்தில் ஆரம்பித்துக் கண்ணுக் கெட்டியவரை பரவிய ஒரு பெரிய சேனா சமுத்திரம் காணப்பட்டது. அந்தச் சேனா சமுத்திரத்தின் இடை இடையே கணக்கில்லாத கொடிகள் காற்றிலே பறந்த காட்சியானது, காற்று பலமாய் அடிக்கும்போது சமுத்திரத்தில் நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் வெண்ணுரை எறிந்து அலைகளை ஒத்திருந்தது.

சக்கரவர்த்தியுடன் அணி வகுத்து முன்னும் பின்னுமாகச் சென்ற சிறு சைன்யம் குறுகிய கோட்டை வாசல் வழியாகவும், அகழியின்மீது அமைத்த தொங்கும் பாலத்தின் வழியாகவும் சென்று அந்தப் பெரிய சேனா சமுத்திரத்தில் கலந்த காட்சி, காவேரி நதி கொஞ்சம் கொஞ்சமாகக் குறுகலாகி வந்து கடைசியில் கடலோடு ஒன்றாகி விடும் காட்சியை நினைவூட்டியது.

* * *

வடக்குக் கோட்டை வாசலில், அகழிக்கு அப்புறத்தில் நின்று, மாமல்ல சக்கரவர்த்தி கடைசியாக விடை பெற்றுக் கொண்டது மான

வன்மரிடமும் தமது அருமைக் குழந்தைகள் இருவரிடமுந்தான்.

மகேந்திரனையும் குந்தவியையும் தமது இரு கரங்களாலும் வாரி அணைத்துத் தழுவிக் கொண்டபோது, "இந்தக் குழந்தைகளை இனிமேல் எப்போதாவது காணப் போகிறோமா, இல்லையோ?" என்ற எண்ணம் தோன்றவும், மாமல்லரின் கண்கள் கலங்கிக் கண்ணீர் தளும்பிற்று.

உடனே அவருடைய ஞாபகம் சிவகாமியின்பால் சென்றது. ஆகா! அந்தப் பழிகாரியின் வீண் பிடிவாதம் காரணமாக அல்லவா இந்த வினையெல்லாம் நேர்ந்தது? அவளுக்காக அல்லவா இந்த அருமைக் குழந்தைகளைப் பிரிந்து, அவர்களை அபாயத்தில் விட்டு விட்டு, தூர தேசத்துக்குப் போக வேண்டியிருக்கிறது? அவள் ஒருத்தி காரணமாக அல்லவா இவ்வளவு லட்சக்கணக்கான வீரர்களும் யானை, குதிரை முதலிய பிராணிகளும் போர்க்களத்தில் மடிந்து விழும்படி நேரப் போகிறது? இந்த நேரத்திலே கூட, 'நல்ல சகுனம் ஆகவில்லை' என்று சொல்லிப் பிரயாணத்தை நிறுத்தி விட்டாலென்ன?—இவ்வாறு ஒருகணம் எண்ணமிட்ட மாமல்லர் மறுகணத்தில் பல்லைக் கடித்து உறுதி செய்து கொண்டு, "சீ! இப்போது பிரயாணத்தை நிறுத்தினால் பல்லவ குலத்துக்கு உலகம் உள்ள அளவும் அழியாத அபகீர்த்தி அல்லவா ஏற்படும்? சிவகாமிக்காக மட்டும் அல்ல;—பல்லவ குலத்தின் மானத்தைக் காப்பதற்காகப் புலிகேசியைப் பழி வாங்கியே தீரவேண்டும்!" என்று சங்கல்பம் செய்து கொண்டார்.

இத்தகைய சங்கல்பம் மனதிற்குள் செய்து கொண்டிருந்த போதே அவர் கண்களில் துளித்த கண்ணீர் வற்றிக் கண்கள் வறண்டு விட்டன. தழுவிய குழந்தைகளைக் கீழே இறக்கி விட்டு மானவன்மனைப் பார்த்து மாமல்லர் சொன்னார்:—"என் அருமை நண்பரே! இந்தக் குழந்தைகளையும் இவர்களுடைய தாயாரையும் பல்லவ ராஜ்யத்தையும் உம்மை நம்பித்தான் ஒப்படைத்து விட்டுப் போகிறேன். நீர் தான் இவர்களைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து நான் திரும்பி வரும்போது ஒப்படைக்க வேண்டும். மானவன்மரே! பரஞ்சோதியின் அபிப்பிராயப்படி திருக்கழுக்குன்றத்தில் திரண்டிருந்த படையில் ஒரு பகுதியை நிறுத்திவிட்டுப் போகிறேன். பாண்டிய குமாரனாலோ, அவனுடைய படையினாலோ காஞ்சிக்கு அபாயம் நேர்வதாயிருந்தால், நமது படையைப் பயன்படுத்தத் தயங்க வேண்டாம். தளபதி கார்த்திகேயனை உமது கட்டளைப்படி நடந்து கொள்ள ஆக்ஞாபித்திருக்கிறேன்!"

"ஆகட்டும், பிரபு! தங்களுக்கு இவ்விடத்துக் கவலை சிறிதும் வேண்டாம்!" என்றான் மானவன்மன்.

"ரொம்ப சந்தோஷம். கடைசி நேரத்தில் எங்கே நீங்களும் வர வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறீர்களோ என்று பயந்து கொண்டிருந்தேன். இதுதான் உண்மையான சிநேகத்துக்கு அழகு!" என்று உள்ளம் உவந்து கூறினார் மாமல்லர்.

அப்போது மகேந்திரன் ஆயிரத்தோராவது தடவையாக, "அப்பா! நானும் வாதாபிப் போருக்கு வருகிறேன். என்னையும் அழைத்துப் போங்கள்!" என்றான்.

புதல்வனைப் பார்த்து மாமல்லர், "மகேந்திரா! இந்த வாதாபி யுத்தம் கிடக்கட்டும். இதை விடப் பெரிய இலங்கை யுத்தம் வரப்போகிறது. உன் மாமாவின் இராஜ்யத்தை அபகரித்துக் கொண்டவனைப் போரில் கொன்று இராஜ்யத்தைத் திரும்பப் பெற வேண்டும். அந்த யுத்தத்துக்கு நான் வரவில்லை; நீயே போகலாம்!" என்றார்.

இவ்விதம் கூறிவிட்டு மாமல்லர் சட்டென்று குழந்தைகளைப் பிரிந்து சென்று போர் யானைமீது ஏறிக் கொண்டார். அவ்வளவுதான்; அந்தப் பெரிய பிரம்மாண்டமான சைனியம் சமுத்திரமே இடம் பெயர்ந்து செல்வதுபோல் மெதுவாகச் செல்லத் தொடங்கியது. அவ்வளவு பெரிய சைனியம் ஏக காலத்தில் நகரும்போது கிளம்பிய புழுதிப் படலமானது வானத்தையும் பூமியையும் ஒருங்கே மறைத்தது. அந்தப் புழுதிப் படலத்தில் பல்லவ சைன்யம் அடியோடு மறைந்து போகும் வரையில் மானவன்மரும், மகேந்திரனும், குந்தவியும் கோட்டை வாசலில் நின்று கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். பி. துரைசாமி, C/o எம். பி. நீலகண்டம் சுந்தரம் ட்ரான்ஸ் போர்ட், மதுரை.




## அரைக்கீரை விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இருமுறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண், எரிச்சல். கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

●

மதராஸ் விற்பனை ஏஜெண்டுகள் :

புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு. திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டு :

B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

## தேவை எதுவாயினும் பரிபூரண திருப்தியுடன் ஜவுளிகள் வாங்க



## புதிய ஜவுளிக் கடை

# ஸ்ரீ லக்ஷ்மி ஹால்

7, வடக்கு மாட வீதி

**மயிலாப்பூர் :: மதராஸ்**

BALU'S

3 — 6-1

# சொக்கி சொன்னாள்

"அம்மா! அம்மா!!" என்று யாரோ மெதுவாகக் கதவைத் தட்டிய சத்தம் கேட்டது. நானும் போய்த் திறந்தேன். சொக்கிதான் வந்து கொண்டிருந்தாள்.

"ஏதடி! இந்த நேரத்திலே? இப்பத்தானே உன் புருஷன் வீட்டுக்கு வந்தான்? அவனைத் தேடியா வந்தாய்?" என்றேன்.

"இல்லேம்மா, சும்மாத்தான் வந்தேன்" என்றாள்,

"சும்மா எதுக்கடி? ஏதாவது குழம்பு கிழம்பு வேண்டுமா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லேம்மா! எம் புருஷன் வந்து சொல்லுச்சு, நான் வந்தேன்" என்றாள் மறுபடியும்.

"உன் புருஷன் வந்து என்ன சொன்னான்?"

"பண்ணாடி வீட்டிலே அந்தச் சின்னக் குழந்தை மாத்திரம் ஒண்டியா யிருக்குது. பண்ணாடியும் அந்தம்மாளும் ஊருக்குப் போயிட்டாங்க. ராத்திரியிலே, பாவம், அது தனியாத்தானே இருக்கும்? நீ வேணும்னு போயி துணைக்குப் படுத்துக்கிறது தானேன்னு சொல்லுச்சு. சரிதான்னு நானும் அதுக்குக் கஞ்சி ஊத்திட்டுவந்தேம்மா" என்றாள் சொக்கி.

"ஓஹோ, இப்படி உட்காரு. நானும் சொக்கன் கிட்டே சொல்லி யனுப்ப வேண்டும் என்றுதான் நினைத்தேன். அப்புறம் உனக்குச் சௌகரியப் படுமோ, என்னமோன்னு பேசாமல் இருந்து விட்டேன். நல்ல வேளையா அவனே அதைத் தெரிஞ்சு உன்னை அனுப்பி யிருக்கிறான். நானும் இப்பத்தான் சாப்பிட்டு முடித்தேன்" என்றேன் நான்.

"எம்மா, உங்க அப்பாவும் அம்மாவும் எங்கே போயிருக்காங்க?" என்று கேட்டாள் சொக்கி.

"மதுரையிலே எங்க பெரியப்பாவுக்கு, அதாவது எங்க அப்பாவின் அண்ணாவுக்கு சொம்பு



ஆபத்தா யிருக்குன்னு தந்தி வந்துச்சு. ராத்திரி 11 மணி வண்டியிலே போயிருக்காங்க."

"அப்படின்னு திரும்பி வர ரெண்டு மூணு நாளு ஆகுமோ?"

"யார் கண்டது? அங்கே எப்படி யிருக்கிறதோ? எங்க பெரியப்பாவுக்கும் வயதாகி விட்டது. ஒரு வேளை இறந்து போய் விட்டால் இவர்கள் திரும்பி வர நான்கு நாள் பிடிக்கும். அது கிடக்கட்டும். நீ இன்னைக்கி ஒரு நாளைக்கு மட்டும் வந்து படுத்தாப் போதுமா?"

"ஒரு நாள் என்னம்மா? அவுங்க திரும்பி வர வரைக்கும் உங்களுக்குத் துணையா யிருக்கேன், போதுமா? எனக்குத்தான் வீட்டிலே என்ன வேலை?"

"என்னடி இப்படிச் சொல்றே? இப்ப நான் ஊரிலே யிருந்து வந்து ஒரு மாசந்தானே ஆகிறது? அவரை விட்டுட்டு இருக்கிறதன்னு என்னமோ மாதிரி இருக்குதே! உனக்கும் அப்படித்தானே இருக்கும், சொக்கனை விட்டுட்டுத் தனியா யிருக்கும்போது!"

"அதுக்காகச் சொல்றீங்களாம்மா? உங்களுக்கும் எனக்கும் வித்தியாசமில்லியா? உங்களுக்குக் கண்ணாலம் ஆகி ஒரு வருஷந்தானே ஆகுது. எனக்கு வருகிற ஆடி மாசம் வந்தா அஞ்சு வருச மாச்சுங்களே!"

"அதனாலே என்னடி? அஞ்சு வருஷமானு என்ன; அம்பது வருஷமானு என்ன? அதுக்காகப் புருஷன் மேலே இருக்கிற பிரியம் போயிடுமாடி?"

"அதென்னமோ, போங்கம்மா! நீங்க வேளை யாட்டா கேக்கிறீங்க. எம்மா, நீங்க இப்பத்தானே ஊருக்குப் போனீங்க. அதுக்குள்ளே என் திரும்பி வந்துட்டீங்க?"

"அதை ஏண்டி கேக்கிறே? சர்க்கார் வேலையிலே இருக்கிற வுங்களைக் கல்யாணம் பண்ணிக்கிறவுங்க பாடெல்லாம் என்னைப் போலத்தான். அவுங்களைத் திடீர்னு வேறே ஊருக்கு மாத்திட்டாங்க. அந்த ஊரிலே குடிக்கத் தண்ணி கிடைக்காதாம்.

பி. மீனாக்ஷி

சிறுகதைப் போட்டி முதற் பரிசுக் கதை



அங்கே போயி வீடு கிடு பார்த்துக்கிட்டு அப்புறம் வந்து என்னைக் கூட்டிகிட்டுப் போறதாச் சொல்லி இங்கே அனுப்பிட்டாங்க. இங்கேயாவது சந்தோஷமா யிருக்கலாம்னு வந்தா, எங்கப்பாவும் அம்மாவும் நேத்து புறப்பட்டுப் போயிட்டாங்க."

"இதுக்கென்னம்மா இப்படிக் கவலைப் படுறீங்க? ரெண்டு நாளிலே திரும்பி வந்திட மாட்டாங்களா? அதுக்கப்புறம் உங்க வீட்டுக்காரரும் வந்து கூட்டிக்கிட்டுப் போயிடுவாரு, இல்லையா?"

"அது எப்படியோ நடக்கிறபடி நடக்கட்டும். மணி பன்னிரண்டு ஆகப்போகுது, படுக்கலாம். நீ எங்கே படுக்கிறே? உனக்குத் தூக்கம் வரலையா?"

"நெதம் தூங்கித் தூங்கி என்னத்தைக் கண்டோம்? இன்னைக்கி ஒரு ராத்திரி முழிச்சிருந்தா என்ன?"

"சரிதான்; அப்ப ஒரு கதை சொல்லேன், கேட்டுக்கிட்டே தூங்கறேன்."

"போங்கம்மா, நீங்க எவ்வளவு படிச்சிருக்கிங்க. எத்தினி கதை உங்களுக்குத் தெரியும். நீங்கதான் ஒண்ணு சொல்லுங்களேன்!"

"நீயும் திண்ணைப் பள்ளிக்கூடத்திலே அஞ்சாவது வரைக்கும் படிச்சிருக்கிறதா சொன்னியே. நாங்க படிக்கிற கதைக்கும் உங்க ஜாதியிலே சொல்லிக் குடுக்கிற கதைக்கும் வித்தியாசம் இருக்குமின்னு தான் கேட்டேன்."

"பள்ளிக்கூடத்திலே படிக்கிற கதைகள்ளாம் ஒரு கதையா? அதுவும் அஞ்சாவது புள்ளைங்களுக்கு என்னத்தை இருக்குது? என்னுடைய கதையே பெரிய கதையாயிருக்கும். நான் பிறந்ததும், வளர்ந்ததும், கண்ணாலம் பண்ணிக்கிட்டதும், இதுகளைக் கேட்டாலே நீங்க ஆச்சரியப்படுவீங்கம்மா!"

"அப்ப, அதைத்தான் சொல்லேன். தூக்கம் வராமே இருக்கிறதுக்கு அதையாவது கேட்டுக்கிட்டிருக்கேன் ... அடடே... ஏண்டி சிரிக்கிறே?"

"இல்லிங்கம்மா, சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னேன், அந்தக் கதையையே சொல்லுடின்னு புடிச்சுக்கிட்டிங்களே. என் கதை என்ன, உங்களுக்குத் தெரியாததா? என் புருசன்தான் உங்ககிட்டே பத்து வருசமா வேலை செஞ்சுக்கிட்டிருக்கே. நான் கண்ணாலம் பண்ணிக்கிட்டு அஞ்சி வருசம் தானுங்களே ஆகுது!"

"உன் புருஷனைப்பத்தி நீ சொல்லி நான் தெரிஞ்சுக்க வேண்டியது ஒண்ணுமில்லே. எங்க வீட்டுக்கும் எத்தினியோ வேலைக்காரன்கள் வந்து போயிருக்கான்கள். ஆனால் சொக்கனைப்போல நான் பார்த்ததே இல்லே. எங்கப்பாவுக்கு அவனைக் கண்டால் அவ்வளவு பிரியம். அவனை நம்பி வயல் காரியங்களை யெல்லாம் அவன் பொறுப்பிலேயே விட்டிடுவாங்க. அது மாத்திரமென்ன, எங்க வீட்டிலே என்ன முக்கியமான வேலை இருந்தாலும் சரி, அவன் செய்தால்தான் எங்களுக்குத் திருப்தி உண்டாகும். எப்பவாவது ஒரு சமயம் எங்கப்பாவுக்குக் கோபம் வந்து விட்டாலும் அதை அவன் பொறுத்துக் கொள்வான். ஆனால் எங்கப்பாவுக்கும் காரணமில்லாமல் கோபம் வராது."

"அதென்னமோ நெஜந்தாம்மா. எனக்கும் இப்பத்தான் ஒரு விசயம் நெனைப்புக்கு வந்துச்சு. எனக்குக் கண்ணாலம் நடந்தது உங்களுக்கு நெனவு இருக்குதுங்களா?"

"அப்ப எல்லாம் எனக்கு என்ன வயசு? பன்னிரண்டு இருக்கும்; பள்ளிக்கூடத்துக்குப் போயிக்கிட்டிருந்த சமயம். அவ்வளவு சரியா நினைவு இல்லே. கனாக் கண்டது மாதிரி இருக்குது."

"என்னம்மா இப்படிச் சொல்றீங்க? கண்ணாலம் முடிஞ்சு வந்து நானும் என் புருசனும் உங்கக் காலிலே கும்பிட்டு விழுந்தப்ப, உங்கப்பா உங்கக் கையிலே ஒரு சேலையையும் வேட்டியையும் குடுத்து எங்க ரெண்டு பேருகிட்டேயும் குடுக்கச் சொல்லலையா? அதைக் கூடவா மறந்திட்டிங்க?" என்று எனக்கு நினைவூட்டினாள்.

நானும் சற்று நேரம் யோசித்துப் பார்த்து விட்டு, "ஆமாடி, ஆமாம். இப்பத்தான் நினைவுக்கு வருது. அப்ப நீ இந்தச் சொக்





கனைப் பார்த்த பார்வையிலே அவன் மயங்கி விட்டானே!" என்றேன்.

"அது இருக்கட்டுங்கம்மா, உங்க அப்பாவுக்கு வந்த கோவத்தைச் சொல்ல வந்தேனே, அதைக் கேளுங்க."

"சரி; சரி சொல்லு. எனக்கும், வந்த தூக்கம் எங்கேயோ போச்சு. இனிமே எங்கே வரப் போகுது? இன்னைக்கு ஏகாதசிதான், போ!"

"எனக்குக் கண்ணாலம் செஞ்ச புதுசிலே எங்க சேரியிலே என்ன பேசிக்குவாங்க தெரியுமா? 'சொக்கி—சொக்கன். அடி ஆத்தா, எவ்வளவு பொருத்தமான பேரு! இந்தச் சொக்கனை எப்படித்தான் இந்தச் சொக்கி மயக்கினாளோ?' அப்படின்னு பேசிக்குவாங்க."

"ஏன்டி, சொக்கி! என்னடி உன் புருஷன் பேரைச் சொல்லிட்டியே?" என்று நான் கேலியாகக் கேட்டேன்.

"எங்களுக்குன்னேயும் புருசன் பேரைச் சொல்லுற வழக்க மில்லேம்மா.' இருந்தாலும் நானும் என் புருசனும் கண்ணாலம் செய்துக்கிறதுக்கு முந்தியிருந்தே ஒருமாதிரி பழகிட்டதினாலே, அதுக்கு முன்னே பேரைச் சொல்லிக் கூப்பிட்ட பழக்கத்திலே இப்பவும் நெனைப்பில்லாமே சொல்லிட்டேன்!"

"என்ன, என்ன! கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முந்தியே நீயும் அவனும் ஒருமாதிரி பழகிட்டிங்களா? அப்படின்னு எனக்குச் சரியா விளங்கலியே?"

"போங்கம்மா நீங்க! ஒவ்வொன்றையும் வெவரமாக் கேக்கிறீங்க! இதை யெல்லாம் நான் எப்படிங்க சொல்றது? எனக்கு வெக்கமா இருக்காதா?"

"இதிலே வெக்கம் என்னடி, வெக்கம்? பொம்பளைக்குப் பொம்பளை ரகசியம் வேறயா? சும்மாச் சொல்லுடி!"

"வேறே ஒன்றும் பெரிய சமாச்சாரமில்லேம்மா. எங்கப்பன், சேரியிலே கொஞ்சம் பணக்காரரு. அதனாலே நான் மத்தப் பொண்ணுகளைப் போல வயல்லே கூலி வேலை செய்யிறதுக்குப் போறதில்லே. எங்களுக்கே சொந்தமா ஒரு காடு இருக்கு. அந்தக் காட்டிலே ஒரு நாளு கடலை தோண்டிக்கிட்டு இருக்கும்போது இந்தச் சொக்கன் அந்தப் பக்கமா வந்திச்சு. வந்ததும் சுத்தியும் முத்தியும் பாத்துட்டு ஒருத்தரு மில்லாததைக் கண்டு எங்கிட்டே வந்து 'ஏ சொக்கி! நீ என்ன தனியாக் கடலை தோண்டிக்கிட்டிருக்கியே? உனக்குப் பயமா இல்லி

யா?'ன்னு கேட்டுச்சு. 'அதைப் பத்தி உனக்கு என்ன கவலை? நீ பாட்டுக்கு உன் வேலையைப் பாத்துக்கிட்டுப் போ'ன்னு நான் கொஞ்சம் கோவமாச் சொன்னேன். அதுக்கு, 'என்ன புள்ளே! நீ இதுக்குக் கூட கோவிச்சுக்கிறே? உன்னைச் சேரியிலே பாக்குப்போ தெல்லாம் உன்கிட்டே ஒரு பேச்சாவது பேசணும்னு என் மனசு கிடந்து துடிக்கும். ஆனால் அங்கேதான் உன்னைப் பார்த்துக்கிட்டே எத்தினியோ மொட்டப் பயலுக நின்னுக்கிட்டிருக்கான் களே! அங்கே எப்படிப் பேசிக்கிலாம்னு இருந்தேன். இன்னைக்குத்தான் உன்னைப் பாக்க முடிஞ்சுது. உன்கிட்டே.........' அப்பிடின்னு நீட்டிப் பேசிச்சு. இவ்வளவு சொன்னால் வயசு வந்த ஒரு பொண்ணுக்கு வெவரம் தெரியாமப் போகுமா? அது என்ன எண்ணத்தோடே எங்கிட்டே வந்து பேசிச்சு என்கிறது எனக்குத் தெரிஞ்சு போச்சு. பேச்சை வளக்க இடமில்லாமே நான் அதைக் கோவமாப் பாத்து, 'இந்தா சொக்கு! நீ பெரிய வீட்டுப் பண்ணையாளுன்னு நெனைச்சுக்கிட்டு, அந்தத் தைரியத்திலே பேசுறே! நீ என் கூடப் பேசிக்கிட்டிருக்கிறதைப் பார்த்து யாராவது எங்கப்பன் கிட்டே போயிச் சொல்லிட்டாங்களோ, அப்புறம் நீ நம்ம சேரியிலே குடியிருக்க முடியாது. ஆமாம், சாக்கிரதையா இருந்துக்க'ன்னு சொன்னேன். அது எம் பேச்சைச் சட்டை பண்ணாமே, 'அப்படியே உங்க அப்பன் கிட்டே போயிச் சொன்னாத் தான் என்ன? நாளைக்கி நீ யாரையாவது ஒரு பயலைக் கட்டிக்கிட்டுத்தானே ஆகணும்? கண்ணாலம் பண்ணிக்காமே இருக்க முடியாது இல்ல, அந்தப் பயல் நானாக இருக்கக் கூடாதா?'ன்னு சிரிச்சுக்கிட்டே கேட்டுச்சு!"

"சொக்கி, ரொம்ப துணிச்சல்காரன் தாண்டி அவன் எங்க ஜாதியிலே இந்த மாதிரி ஆண்பிள்ளை வந்து பெண்களிடத்திலே பேசவே மாட்டார்கள். இப்பத்தான் படிப்பு அதிகமாகப் போகப் போக ஒருத்தருக்கொருத்தர் காயிதங்கள் எழுத ஆரம்பிச்சிட்டாங்க" என்று நான் குறுக்கிட்டுச் சொக்கனை உயர்த்திப் பேசினேன். அதற்குச் சொக்கி சொன்ன பதில் என்னைப் பிரமிக்க வைத்து விட்டது.

"நீங்க உங்க ஜாதியை உசத்தியாச் சொல்றீங்க. எத்தனி பேரை நான் பாத்திருக்கேன், தெரியுமா? மொதல்லே அதைத் தர்றேன், இதைத் தர்றேன்னு ஆம்பிளைகள் காயிதத்திலே எழுதிக் கேக்கிறதை நெசம்னு நம்பி, நல்லாப் படிச்ச பொண்ணுங்க கூட மொச்சு வீட்டை விட்டு ஓடிப் போகுதுங்க. ஆனா எங்க ஜாதியிலே அப்படியா? ஒருத்தருக்கொருத்தர் மனசிலே பிரியம் விழுந்தாச்சுன்னு, நேருக்கு நேரா தனியாயிருக்கும்போது பேசிக்குவோம். பின்னாலே பெரிய மனுசருங்க எங்க மனசுபோலே கண்ணாலத்தையும் முடிச்சு வைப்பாங்க. கண்ணாலமும் முடிஞ்சிட்டா, உயிரு போற வரைக்கும் என்ன கஷ்டம் வந்தாலும் நஷ்டம் வந்தாலும் பிரிய மாட்டோம். ஒங்க ஜாதியிலே அப்படி இருப்பாங்களா?— சரி, ஊருக் கதையெல்லாம் நமக்கு எதுக்கம்மா? எங்க கதையைச் சொல்லுகிறேன், கேளுங்க......".

"சொக்கி, இந்த விஷயமெல்லாம் எப்படியடி உனக்குத் தெரியும்?" என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"இது என்னம்மா பெரிய ரகசியம்? எங்க சேரியிலே அந்தப் பெரிய மனுசாள் வீடுகளிலே போயி வேலை பாக்கிறவுங்க இதைப் பத்தி அடிக்கடி பேசிக்குவாங்க. எத்தனையோ வீடுகளிலே இந்த மாதிரிதான் நடந்திருக்குதாம்."

"அப்படின்னா நீயும் எங்க வீட்டுச் சமாச்சாரங்களைப் பத்தி உங்கச் சேரியிலே பல பேரு கிட்டேயும் சொல்லித்தானே இருப்பே?"

"ஆமம்மா, உங்க வீட்டிலே நடக்கிற நல்ல விஷயங்களையும் எங்க சாதிக்குள்ளே அடிக்கடி பேசிக்கிட்டுத்தானிருப்போம். இந்த ஊரிலேயும் எத்தனியோ பணக்கார மொதலாளிங்க இருக்கத்தான் செய்றாங்க. ஆனால் இந்தப்



பெரிய வீட்டுப் பண்ணைக்காரரு வேலைக்காரங்க கிட்டே அன்பா நடக்கிற மாதிரி வேறே யாருமே நடக்கிறதில்லேன்னு நான் பேசிக்கிருக்க. அவ்வளவு தூரத்துக்கு ஏன் போகணும்? நான் அந்தக் கடலைக் காட்டுலே சொக்கனைக் கோபமாய்ப் பேசி வெரட்டின வெரட்டிலே அது பயந்துக்கிட்டுப் போயிருச்சு. கடைசியிலே எங்களுக்கு முடி போட்டு வைச்சவரு யாருங்க தெரியுமா? ஒங்க அப்பாதான்! இதுக்கு அவங்க என்னென்ன வேலைங்கள்ளாம் செஞ்சாங்கன்னு கேக்கக் கேக்க எம் மனசு இன்னமும் சந்தோஷப் படுது. கண்ணாலச் செலவு அவ்வளவையும் எம் புருசனுக்கு உங்க அப்பாதான் குடுத்தாங்களாம்!"

"சொக்கி, அதெல்லாம் எனக்குத் தெரியும். கடலைக் காட்டுக் கதையை அப்படியே நிறுத்திவிட்டு ரொம்ப தூரம் வந்து கண்ணாலம் முடிஞ்சதைச் சொல்லி நிறுத்திட்டியே!"

"அது கெடக்கட்டுங்கம்மா. நான் சொல்ல வந்த விசயத்தையே மறந்திட்டேன் பாத்திங்களா? ஒங்க அப்பாவுக்குக் கோபமே வராது. அப்படியே வந்தாலும் அதைப் பொறுக்கவும் முடியாது என்கிற விசயமாகத்தானே சொல்ல வந்தேன். நீங்க வேறே என்னென்னமோ கேக்கவும் அது மறந்தே போச்சு...... எம்மா, வெளக்கிலே எண்ணெ இல்லிங்களா?" என்று சுவரில் மாட்டியிருந்த விளக்கு அணைந்து போனதைக் கண்டு கேட்டாள் சொக்கி.

"பாத்தியாடி, விளக்கு நின்றதுகூட தெரியாமப் பேசிக்கிட்டிருந்திருக்கிறோமே" என்றேன் நான் ஆச்சரியத்தோடு.

"வெளக்கு இல்லாட்டி என்னம்மா, இந்த நெலாத்தான் இந்தப் பக்கம் சாஞ்சிருச்சே! இங்கே பாருங்க, பட்டப் பகல் போலே இருக்கு வெளிச்சம்......எம்மா எந்திருச்சு உக்காந்திட்டிங்க?"

"இல்லே. இரண்டு வெத்திலை போட்டுக்கிறேன். அப்பத்தான் தூக்கம் வராமல் இருக்கும்."

"அப்படின்னு தூக்கம் வருதாம்மா? பின்னே தூங்குங்களேன்! எனக்காக ஏன் தூக்கத்தைக் கெடுக்கிறீங்க?"

"தூக்கமெல்லாம் போயி வெகு நேரமாச்சடி. வெத்திலை போட்டுக்கிட்டா உன் பேச்சை இன்னும் கொஞ்சம் உற்சாகமாகக் கேக்கலாம் பாரு, அதுக்குத்தான். இந்த மாதிரி இனிமேல் நீயும் நானும் எப்போ தனியா இருந்து பேசப் போறோம்? ஒரு வேளை நாளைக்கே எங்கப்பாவும் அம்மாவும் திரும்பி வந்துட்டாங்கன்னு, நீ துணைக்கு வந்து படுக்க முடியுமா? இந்தா, நீயும் வெத்திலை போட்டுக்க" என்று நான் சொன்னதும், அவள் சட்டென படுக்கையை விட்டெழுந்து இரண்டு கையையும் நீட்டி வாங்கிக் கொண்டு, மறுபடியும் படுக்கையில் உட்கார்ந்தபடியே வெத்திலை போட ஆரம்பித்தாள். நானும் வெற்றிலையை மென்று கொண்டே "சரி, சொல்லு. எங்கப்பா மேலே என்னமோ புகார் சொல்ல வந்தியே?" என்று அவளைத் தூண்டினேன்.

"ஐயையோ, புகார்னு நெனைச்சுக்கிட்டிங்க! கோவமிருக்கிற இடத்திலேதான் குணமிருக்கும்னு சொல்லுவாங்களே. அந்தமாதிரி உங்க அப்பாக்கிட்டேயும் குணமிருக்கு என்கிறதைத்தான் சொல்ல வந்தேன். மத்தபடி அவங்க மேலே புகாரு சொன்னா இந்த நாக்கு அழுகிப் போயிராது?"

"சரி, சரி, சொல்லு கதையை" என்று நான் அவளை மேலும் தூண்டினேன். அவள் ஆரம்பித்தாள்:

"எனக்குக் கண்ணாலம் பண்ணின புதுசு. வயலிலே அப்பத்தான் வேலை ஆரம்பமாகிற சமயம். உங்கப்பாவுக்குத்தான் ஏராளமா நிலங்கள் இருக்கிற விஷயம் உங்களுக்குத் தெரியுமே! பண்ணடிகிட்டே இருக்கிற ஏருக பத்தாதின்னு கூலிக்கு வேறே பத்து ஏரு புடிச்சு வயல் உழவு ஆரம்பமாச்சு. அதனாலே என் புருசனுக்கு வீட்டுக்கு வந்து கஞ்சி குடிக்கிறதுக்குக் கூட நேரமில்லே. நான்தான் வயலுக்குக் கஞ்சி கொண்டு போறது. உழவெல்லாம் முடிஞ்சு, பரம்படிச்சு, நெல்லும் விதைச்சிட்டாங்க. அப்புறம் கொஞ்சம் வேலை குறைஞ்சது. இருந்தாலும் எம் புருசன் மாத்திரம் எந்நேரமும் வயல் பக்கமே சுத்திக்கிட்டுத் திரியும். அந்தச் சமயங்கள்ளே நான் கஞ்சி கொண்டுபோனால் சாவகாசமாக் குடிச்சிட்டு ஆத்து ஓரமா இருக்கு பாருங்க, அந்த அரசமரம், அந்த நெழல்லே அது துண்டை விரிச்சு, மம்பட்டியைத் தலைக்கு வைச்சுக்கிட்டுப் படுத்துக்கும். நான் தலைப் பக்கம் உக்காந்து அது தலையிலே பேன்

பார்த்துக்கிட்டு இருப்பேன். அப்ப, அது வேடிக்கை வேடிக்கையாப்பேசும். ஒவ்வொரு காலைக்கி இந்த வேடிக்கையே வெனையாப் போயிடும். எங்க ரெண்டு பேருக்கும் சண்டைகூட வந்திடும். அந்தச் சண்டையெல்லாம் கொஞ்ச நேரத்துக்குத்தான்! சாயங்காலம் நான் வீட்டுக்குத் திரும்பறதுக்குள்ளே சமாதானம் ஆயிடுவோம்......"

"உம், அப்படிச் சொல்லு. அதெல்லாம் சண்டையிலே கணக்கில்லேடி, சொக்கி! அந்தமாதிரிச் சந்தோஷத்திலே சண்டை போடுறதைப் படிச்சவங்க ஊடல்னு சொல்லுவாங்க. புருஷன் பெண்டாட்டிக்குள்ளே அந்தமாதிரி இல்லாட்டி வாழ்க்கையிலே சந்தோஷமே இருக்காதாம்" என்று அதற்கு வியாக்யானம் செய்தேன். அவளுக்கு அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

"அதென்னமோ, அம்மா! எனக்கும் அவருகிட்டே வம்பு இழுக்காட்டி பொழுதே போறதில்லே. ஆனால் இந்தமாதிரி இருந்த எங்களைப் பிரிச்சு வைக்கிறதுக்கு எங்கேயோ இருந்து வந்துச்சு, எமன் வாகனம்!"

"என்ன, உங்க ரெண்டு பேரையும் பிரிச்சு வைத்தது? எமன் வாகனமா? ஏது, எருமை மாட்டையா சொல்றே? ஏன், நீங்க ரெண்டு பேரும் பேசிக்கிட்டிருக்கும் போது சொக்கனை வந்து முட்டித் தள்ளி ஓச்சோ?" என்று நான் சிரித்து விட்டேன். அவள் சிரிக்கவில்லை. அவள் முகத்தில் சட்டென ஒரு கவலைக் குறி தோன்றியது. பழைய சம்பவங்களை அவள் ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தாள்.

"முட்டித் தள்ளி யிருந்தாலும் தேவலைங்களே, அம்மா! ஒரு நாளு கஞ்சி குடிச்சிட்டு எம் புருசன், என் மடியிலே தலை வைச்சு சந்தோஷமா படுத்திருந்துச்சு. நான் ஒரு கதை சொல்லிக் கிட்டிருந்தேன். அதிலே அதுக்கு ஆனந்தம் சொல்ல முடியாது. 'சொக்கி இந்த மாதிரிக் கதையெல்லாம் இத்தினி நாளும் எங்கிட்டே சொல்லாமத்தானே மூடி வைச்சிருந்தே? இது மாதிரியே தெனம் ஒரு கதை சொல்றியா?'ன்னு...... வெக்கமா இருக்கும்மா, அவரு செஞ்சதைச் சொல்றதுக்கு!" என்று தயங்கினாள்.

"சொல்லுடி அம்மா, இங்கே யாருடி இருக்கா? நான்தானே இருக்கேன்?" என்று ஆவல் தூண்டக் கேட்டேன்.

"நீங்க ஒருத்தர் கிட்டேயும் சொல்லக் கூடாது" என்று உறுதி வாங்கிக் கொண்டு, சொக்கி தொடர்ந்து சொன்னாள்:

"எம் புருசன் என் கன்னத்திலே கிள்ளுச்சு. பலமாக் கிள்ளிடுச்சு. வலி தாங்க முடியலே. நானும் அது கன்னத்திலே நறுக்குன்னு கிள்ளினேன். அது சட்டுன்னு எந்திருச்சு உக்காந்து சிரிச்சுக் கிட்டே என் கன்னத்திலே பளீர்னு அடிச்சிடுச்சு. நானும் திருப்பி நன்னு குடுக்கிறதுக்குள்ளே அது எந்திருச்சு மரத்துக்குப் பின்னாலே ஒளிஞ்சுக்கிடுச்சு. நானும் விடலே. இடுப்பிலே முந்தானியை வரிஞ்சு கட்டிக் கிட்டு அதைப் பிடிக்கிறதுக்காக மரத்தைச் சுத்திச் சுத்தி ஓடியாந்தேன்!'

"ஏதேது! ரொம்ப வேடிக்கையா யிருக்கே? சின்னப் பிள்ளைகள் கண்ணு மூச்சி விளையாடுகிற மாதிரி விளையாடினீங்க போலிருக்கு" என்று என் சிரிப்பை அடக்க முடியாமல் சொன்னேன்.

"கடைசியா விட்டேனா? கெட்டியாப் பிடிச்சுக்கிட்டு ஒரு கன்னத்திலே குடுத்ததுக்கு வட்டியும் சேத்து ரெண்டு கன்னத்திலேயும் குடுத்தேன். 'என்னடி சொக்கி, நான் வெளையாட்டுக்கு அடிச்சதுக்கு நீ பேய் மாதிரி அறைஞ்சிட்டியே?'ன்னு அது கன்னத்தைத் தடவிக் குடுத்துச்சு. அப்பத்தான் எனக்கும் பாவமாயிருந்துச்சு. என் கைகூட எரிஞ்சுச்சு. அடி பலமாகத்தான் விழுந்து போச்சு. அப்புறம் அதைச் சமாதானப் படுத்தி உக்காரவைச்சு, மடியிலே படுக்கப் போட்டுக் கன்னத்தைத் தடவிக் குடுத்துக்கிட்டே யிருந்தேன். அதுக்கு அந்த அடி போன இடமே தெரியலே. எனக்கும் உடம்பெல்லாம் என்னமோ மாதிரி இருந்துச்சு. அப்படியே மரத்துமேலே சாஞ்சுக் கிட்டிருந்தேன். 'அடே பாவி, சொக்கா!'ன்னு இடி மாதிரி சத்தம் கேட்டுத் தூக்கி வாரிப் போட்டு நான் திரும்பிப் பாத்தேன். என் புருசனும் எந்திருச்சிருச்சு. உங்க அப்பா வந்து பக்கத்திலே நின்னுக் கிட்டிருந்தாரு!"

"எங்கப்பாவா? அங்கே எப்படி வந்தார்? அப்படியே வந்திருந்தாலும் நீங்க இருக்கிற நிலையைப் பாத்துட்டுப் பேசாமல் போயிருப்பாகளே?" என்று நான் அவளைக் கேட்டேன்.

"பண்ணுடி கோணம் எங்களுக்குத் தெரியாதா? நாங்க கஷ்டப் படாமே சந்தோசமா இருக்கணுமிங்கிறதுக்காக இன்னைக்கும் நாளைக்கும் எங்களுக்கு வேண்டியதை

யெல்லாம் குடுக்கிற புண்ணியவான் உங்க அப்பா ஒருத்தர்தான். ஆனால், அதுதான் சொன்னேனே, என்னையும் எம் புருசனையும் பிரிச்சு வைக்க எமன் அவனுடைய வாகனத்தை ஏவி விட்டான்னு! நம்ம வயல் களிலே நெல்லு நாத்து தள தளன்னு வளர்ந்து பசேருன்னு இருந்துச்சு. எங்கேயிருந்தோ கயித்தை அறுத்துக்கிட்டு வந்த நாசமாப் போற எருமை மாடு நம்ம வயலைப் பாத்து இரங்கி வயிறுமுட்ட நாத்துகளைத் தின்னுருச்சு. தின்னதோடே போச்சா? அதுக்கு வந்த சந்தோஷத்திலே வயலு பூராவையும் மிதிச்சு, தொவைச்சு, நாத்தை யெல்லாம் பாழாக்கிடுச்சு. ஒரு வயலை மென்னு தீர்த்துட்டு அடுத்த வயலுக்குள்ளேயும் இறங்குகிற சமயத்திலேதான் உங்க அப்பா அரசதிலே இருந்து பாத்துட்டு ஓடியாந்தாங்க ஓடியாந்தவரு மாட்டைக்கூட வெரட்டாமே, காவல் காத்துக்கிட்டிருந்த எம் புருசன் எங்கே போச்சுன்னு தேடிச் சுத்திப் பாக்கும்போது நாங்க ரெண்டு பேரும் இந்த லோகத்தையே மறந்து மரத்தடியிலே இருக்கிறது கண்ணிலே பட்டிருக்குது!"

"உம்......அப்படிச் சொல்லு. அந்த ஆத்திரத்திலேதான் அங்கே வந்து சத்தம் போட்டிருக்காங்க எங்கப்பா! இல்லாட்டி வருவாங்களா?" என்று என் தகப்பனார் பக்கமாக நான் பேசினேன். அவளும் அதை மறுக்கவில்லை.

"அது தானுங்கம்மா நான் மொதல்லேயே சொல்லலியா, பண்ணாடி மேலே தப்பு இல்லேன்னு. கேளுங்க, 'அட பாவி சொக்கா' ன்னதும் திரும்பிப் பாத்தோம் நாங்க ரெண்டு பேரும். நாத்து பூராவும் நாசமாக்கிடுச்சுன்னு தெரிஞ்சுது. அப்பவும் எருமை மேஞ்சுக்கிட்டேதானிருந்துச்சு. எம் புருசனுக்குக் காலும் ஓடலே கையும் ஓடலே. நடுங்கிக்கிட்டே நின்னுச்சு. நான் ஒரே தாவா வாய்க்காலைத் தாண்டி ஓடினேன், எருமையை விரட்ட. 'இந்தா புள்ளே சொக்கி! நீ ஓடாதே. உன் வேலையைப் பாத்துக்கிட்டு நீ போ. தெரிஞ்சுதா!' அப்படின்னு ஒரு அதட்டுப் போட்டாரு உங்க அப்பா. நான் திக்குன்னு அப்பிடியே நின்னுட்டேன். அதுக்கு மேலேதான் எம் புருசனுக்குத் தைரியம் வந்து ஓடிச்சு. 'அடே துரோகி! நீயும் போகாதே' அந்த எருமை நல்லா மேயட்டும். போனது போச்சு. எல்லாம் போகட்டும். இந்த வருசம் விளைச்சல்லே நீ மண்ணைப் போட்டிட்டே. உன் வயித்துலேயும் இந்த வருசம் மண்ணுதான்!' அப்படின்னு அதையும் தடுத்தாங்க உங்கப்பா. அது கேக்கலே இல்லே. வரப்பிலே கிடந்த மம்மட்டியை எடுத்துக்கிட்டுப் போயி. அதைத் திருப்பி அந்த எருமையை வெளு வெளுன்னு வெளுத்து ரோட்டுப் பக்கமா ஓட ஓட வெரட்டிட்டு வந்து உங்க அப்பாமுன்னுக்குக் கையைக் கட்டிக்கிட்டு நடுங்கிக்கிட்டே நின்னுச்சு. அப்பக்கூடக் கோவம் தணியலே பண்ணாடிக்கு. 'சொக்கி பேச்சிலே சொக்கி இருந்திட்டியோ! எத்தினி ஆளுக நீங்க ரெண்டு பேரும் சந்தோஷமா இங்கே கூத்தடிக்கிறதைப் பாத்துட்டு வந்து எங்கிட்டே சொல்லியும்கூட அதை யெல்லாம் நான் காதிலே போட்டுக்காமே, என்னமோ சின்னஞ் சிறுசுக, புதுசாக் கல்யாணம் பண்ணிக்கிட்டதுக, போனாப் போகட்டும்ன்னு நான் பேசாமே இருந்தேன். இருக்க, இருக்க, கடைசியிலே அது எனக்கே எமனா வந்து முடிஞ்சுது. சரி, இனி நீங்க ரெண்டு பேரும் எப்பவும் வீட்டிலேயே ஆட்டம் போட்டுக்கிட்டிருங்க. உங்களைக் கேக்க யாருமே வரமாட்டாங்க. நீ வயலுக்குக் காவல் காத்தது போதும். உன் பெண்டாட்டிக்குக் காவலா இரு. போ!' அப்படின்னு கோவத்திலே என்னன்னமோ சொன்னாங்க..." என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு கதையைப் பாதியில் நிறுத்தினாள் சொக்கி.

[அடுத்த இதழில் முடியும்]



புருஷன் :—எப்போ பார்த்தாலும் உன் அம்மாவைப் பத்தித்தானாடி பேசணும்? அதையே கேட்டுக் கேட்டு எனக்கும் அலுத்துப் போச்சு!

மனைவி :—பின்னே, உங்கம்மாவைப் பத்திப் பேசினாத்தான் கோள் சொல்கிறேன் என்று சண்டைக்கு வருகிறீங்களே!

## ஸ்தெலா கலாசாலை, ஜா-எல
## THE STELLA TUTORY, JA-ELA

உயரிய முறைகள்! உன்னத சேவை!!

**தமிழில்** தபால் மூலம் **ஆங்கிலம்**

குறைந்த செலவில் நிறைந்த அறிவு!
ஆறே மாதங்கள் ஆங்கிலம் கற்க!!

தபால் கல்வியில் முதன்மை வகிக்கும் ஸ்தெலா வீட்டிலிருந்தபடியே, வேலைக்குப் பங்கமின்றி அரிச்சுவடியிலிருந்து கேம்பிரிட்ஜ் பரீக்ஷைகள் வரையும் இலகுவில் ஆங்கிலம் கற்பிக்கின்றது.

இலவச விபரங்களுக்கு எழுதுக.

ஸ்தெலா கலாசாலை, ஜாஎல, சிலோன்.



## தங்கமணி



Regd. 102868

துண்டு & தூள் புகையிலை

குணம் மணம் மிகுந்தது

துண்டு ¼ அணா. தூள் பொட்டலம் ½, 1 அணா.



Prop: K. முத்துவேலப்ப கவுண்டர்,
கோபிசெட்டிபாளையம்.

ஏஜண்டு:
M. சக்கரவர்த்தி நயினர்
75, வாத முத்தையப்பன் தெரு :: சென்னை

# நல்ல உபதேசம்

வி. எஸ். சுந்தரராஜன்

கொஞ்சம் கொஞ்சமாக இருட்டிக் கொண்டே வந்தது. இன்னும் தெரு விளக்குகள் எரியத் தொடங்கவில்லை.

அருணாசலமும், அவன் நண்பனும் முன்னவனுடைய வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என்னமோ, கோபு! எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. எங்கேயாவது தூர தேசம் போனால்தான் மனசுக்கு நிம்மதி ஏற்படும்" என்றான் அருணாசலம்.

"இதோ பார்! அருணாசலம், குடும்பம் என்றால் சண்டை, சச்சரவு இருக்கத்தான் இருக்கும். உன்னிடம் கொண்ட அன்பினால்தானே அவள் கண்டிக்கிறாள்?" என்றான் கோபு.

"உனக்குத் தெரியாது, கோபு! என்னை அழவிடுவதில் அவர்களுக்கு ரொம்ப திருப்தி ... என்னமோ! நான் தீர்மானித்து விட்டேன், இந்த இடத்தை விட்டே போய் விடுவதென்று!" என்றான் அருணாசலம்.

"எதையும் தீர யோசித்துச் செய் ...... நான் நாளைக்கு வருகிறேன்" என்று கூறி விட்டுப் போனான் நண்பன் கோபு.

அருணாசலம் அங்கேயே உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தான். விளக்குகள் போடப்பட்டு, தெரு பிரகாச மடைந்தது. ஆயினும் அவன் மனதிலிருந்த இருள் மட்டும் போகவில்லை.

அப்பொழுது அவன் உட்கார்ந்திருந்த வீட்டிற்குள் யாரோ ஒருவர் பிரயாணக் கோலத்துடன் நுழைந்தார். அவரைக் கண்டதும் "வேம்பு மாமா! வேம்பு மாமா வந்தாட்டா!" என்று பலத்த கூச்சலிட்டுக் கொண்டு அந்த வீட்டுப் பிள்ளைகள் தங்கள் மாமாவை வரவேற்றனர். கூச்சல் சப்தம் கேட்டு வெளியே வந்த வீட்டுக்கார அம்மாள் தன் தம்பியான வேம்புவை, "வாடா அப்பா, வா!" என்று அழைத்தாள். அதில்தான் என்ன வாத்ஸல்யம்?

"சௌக்யமா? அத்திம்பேர் இருக்காரோ?" என்று கேட்டவாறே உள்ளே நுழைந்தான் வேம்பு.

"அவர் வர பத்து மணி ஆகும் ...... அ...ப்...பா! நீ வரயோ, இல்லையோன்னு இருந்தது. இந்தப் பசங்களோ என் உயிரை வாங்கிட்டா! 'மாமா எப்ப வருவார்?' 'பட்டாசு, மத்தாப்பு எல்லாம் வாங்கிண்டு வருவாரா?' என்று தொணதொணப்பு சகிக்க முடியல்லே!" என்றாள் அக்கா, பெருமையுடன்.

"அதென்ன அப்படிச் சொல்றே? கடிதம் எழுதி விட்டு வராமல் இருப்பேனா? ... நிறையப் பட்டாசு, கருகரு, சீனி வெடி ... எல்லாம் வாங்கிண்டு வந்திருக்கேன்" என்று அடுக்கிக்கொண்டே போனான் தம்பி.

அதற்கு மேல் நடந்த பேச்சு அருணாசலத்தின் காதில் ஸ்பஷ்டமாக விழுந்தும், அவன் மனதில் ஏறவில்லை. அவன் சிந்தனை லோகத்தை எட்டிப் பிடித்திருந்தான்.

அருணாசலத்திற்கும் ஒரு அக்கா இருந்தாள். அவளுக்கு இரண்டு குழந்தைகள். அத்திம்பேர் நல்ல வேலையில் இருந்தார்.

சென்னைக்கு அருணாசலம் வேலை நிமித்தம் வந்தான். வந்த புதிதில் அக்காவுடன் தங்கினான். அங்கேயே சாப்பாடு, டிபன், படுக்கை, எல்லாம் வைத்துக் கொண்டிருந்தான். அக்காவும், அத்திம்பேரும் அவனிடம் பக்ஷமாகத்தான் இருந்தார்கள். வேலையும் ஆயிற்று.

அருணாசலம் மாத முதலில் சம்பளம் வாங்கியவுடன் அக்காவிடம் பணம் கொடுக்கப் போவான். "அம்பி! அந்த ரூபாய்க்கு ஒரு நல்ல புடவையாக வாங்கி வந்துவிடு" என்பாள். அவனும் வாங்கித் தந்துவிடுவான். இதேபோல் ஒவ்வொரு மாதமும் அவள் ஏதாவது ஒன்று வாங்கி வரச் சொல்லி விடுவாள்.

ஒரு நாள் அவன் சாப்பிடுவதற்காகத் தன் அக்காவின் வீட்டிற்குச் சென்று கொண்டிருந்தான். வாசலறையில் அவன் அத்திம்பேரும், அவருடைய நண்பரும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவன் பெயர் அடிபடவே சற்று நின்று ஒட்டுக் கேட்டான்.

"... அவனால் எனக்கொன்றும் லாபமில்லை. அவனுடைய அக்காவுக்குத்தான் புடவையும், ரவிக்கையும் வாங்கித் தருகிறான் ......!" என்று அத்திம்பேர் மெதுவாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அந்த வார்த்தைகள் அருணாசலத்தின் மனதில் 'சுரீர்' என்று தைத்தன. அதற்கு மறுநாள் முதல் அங்கே சாப்பிடப் போவதை நிறுத்திக் கொண்டான்.



நான்கு நாட்கள் சென்று அங்கே போனபோது அக்கா கேட்கத்தான் கேட்டாள். "சாமான்கள் அகப்படுவது கஷ்டமாக இருக்கும்போது எனக்கும் சேர்த்து வாங்குவது சிரமம்தானே? அதனால்தான் ஹோட்டலில் ஏற்பாடு செய்து கொண்டு விட்டேன்!" என்றான் அருணாசலம்.

ஆனாலும் அதற்குப் பிறகு அவன் நிம்மதியாக இருக்க முடிந்ததா? இல்லை. அவன் அவர்கள் வீட்டிற்குப் போகும்போதெல்லாம் சாவித்திரி அவன் மீது ஏதாவது புகார் சொல்லிக்கொண்டே யிருப்பாள். அத்திம்பேர் அவனுடன் கல கலப்பாகப் பேசுவதில்லை. ஒரு சமயம் அவனைக் கேலி செய்வதுபோல் பேசுவார்கள். ஒவ்வொரு சமயம் அவனைக் கண்டதும் முகத்தைத் தூக்கிக் கொண்டு பேசாமல் இருப்பார்கள்.

அவனுக்கு ஒன்றும் விளங்காது. ஏன் இப்படியெல்லாம் நடந்து கொள்ளுகிறார்கள் என்று சில சமயங்களில் ஆச்சரியப்படுவான். ஆனாலும், அவர்கள் வீட்டுக்குப் போகாமல் அவனால் இருக்கவும் முடியவில்லை. அந்தக் குழந்தைகளிடம் அவன் கொண்டிருந்த பாசம் அவனை அங்கே தள்ளிக் கொண்டு செல்லும்.

பாவம்! அவனுக்காக அவை எவ்வளவோ நாட்கள் அடிபட வேண்டி யிருக்கும். மாமாவிடம் குழந்தைகள் "காசு தா!" என்று ஆசையுடன் கேட்பார்கள்.

அதைக் கேட்டு சாவித்திரி கோபமடைவாள். "காசு கேடிற வழக்கம் என்ன வழக்கம்?" என்று முதலில் இரண்டு அறை வைப்பாள்.

ஒரு முறை, தீபாவளிக்கு நான்கைந்து நாட்க ளிருக்கும்போது, அவன் குழந்தைகளுக்கென்று ஆசையுடன் நான்கைந்து ரூபாய்க்குப் பட்டாசு முதலியவை வாங்கிப் போயிருந்தான். அதைப் பார்த்த சாவித்திரி, "அம்பி! ஏன் இதிலெல்லாம் காசை வீணாக்குகிறாய்? அவர் வேறு வாங்கி வந்திருக்கிறார்" என்று இரைந்தாள். அவன் மனசு உடைந்து போயிற்று.

என்னதான் நாட்கள் ஓடி மறைந்தாலும் அருணாசலத்தினால் இந்தச் சம்பவங்களை யெல்லாம் மறக்க முடியுமா? இந்த வீட்டில் வேம்பு மாமா'வுக்குக் கிடைக்கும் உபசாரங்களையும், தன் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்ட அவனுக்குச் சிரிப்பு வந்தது.

அவன் கண் இமை யோரங்களில் தேங்கியிருந்த கண்ணீர் அந்தச் சிரிப்பு துக்கச் சிரிப்பு என்பதை வெளிப்படுத்திற்று.

"என்ன சார், சௌக்கியமா?" என்று விசாரித்துக் கொண்டே வேம்பு வந்தான்.

"எங்கே யிருந்து வருகிறீர்கள்?" என்று அருணாசலம் ஆவலுடன் கேட்டான்.

"பம்பாயில் 'சௌத் இண்டியன் கன்ஸெர்ன்'ஸில் இருக்கிறேன். அங்கே இருந்துதான் நாலு நாள் 'லீவி'ல் வந்திருக்கிறேன். நீங்கள் இங்கே என்ன வேலையாயிருக்கிறீர்கள்?" என்று கேட்டான் வேம்பு. பேச்சும் தொடர்ந்தது.

அன்று இரவு அருணாசலம், மாலை செய்த தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்து கொண்டான்.

அவ்வளவு நாட்களாக அவன் மனதில் நடந்துகொண்டிருந்த போராட்டத்திற்கும் ஒரு முடிவு கண்டான்.

பேச்சு வாக்கில் வேம்பு சொன்ன வார்த்தைகள் அவன் நினைவில் சுழன்றுகொண்டே யிருந்தன.

"......உறவினர்கள் எல்லாம் தூர இருந்தால்தான் ஸார், நல்லது. அப்போதுதான் அருமை தெரியும். எல்லாம் அனுபவத்தின் மேல்தான் சொல்லுகிறேன், ஸார்!......"

"வேம்பு! நல்ல உண்மையைப் போதித்தாய். உன்னுடனேயே — உன்னுடைய அருயிர்த் தோழனாக — பம்பாய்க்கு வந்து விடுகிறேன். இந்தப் பரந்த உலகில் எனக்கு ஒரு வேலைதானா கிடைக்காமல் போகிறது?" என்றான் அருணாசலம்.

CADBURY'S
CHOCOLATE

•

BOURNVITA

•

BOURNVILLE
COCOA

•

வசதிகள் அதிகம் ஏற்பட்டு சப்ளையும் இறக்குமதி செய்யப்பட்டால் மணத்திற்கும் இணையற்ற சிறப்பிற்கும் உலகப்பிரஸித்தி பெற்றது காட்பரீஸ் தான் என்பதை மறுபடியும் உறுதிப்படுத்தும்

# CADBURY
*means*
# QUALITY



C105





## தலையில்

தலை மயிர் தெரிகிறதா, அல்லது அடித் தலை தெரிகிறதா? அடித் தலை புலப்படும் பகுதியில், உதிர்ந்த கேச ராசிகளுக்குப் பதில் புதுக் கூந்தல் முளைக்கவில்லை என்பது நிச்சயம். அச்சமயம் கேசவர்த்தினியைக் கொண்டு பரிஹரிக்காமல், பாதி வழுக்கையைப் பூரண வழுக்கையாக விடுவானேன்? வழுக்கையால் ஏற்படும் விகாரத் தோற்றத்தையும் அனுபவிப்பானேன்?

உதிர்ந்த இலைகள் மறுபடி முளைத்து விடும். ஆனால் சில சமயங்களில் உதிர்ந்த கூந்தல் சிகிச்சையில்லாமல் முளைப்பதில்லை. அச் சமயங்களில் கேசவர்த்தினியை உபயோகித்து மயிர் உதிர்வதை நிறுத்தி. இளம் கூந்தலையும் இளமையும் ஒருங்கே பெறுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது. விருத்தி செய்வது. அழகு படுத்துவது.

**விலை அணா 12.**

( மேற் செலவு வேறு )

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை,**
**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

No. 5.

## பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மதுரை : தூத்துக்குடி : அம்பாசமுத்திரம்

5,00,000 நூற்கும் கதிர்கள். நம்பர் 80 வரை நூல்கள்

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காசிக்கள் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள், கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக் கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை. ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப்படும் நூல்களில் எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும், சன்னத்திற்கும், நேர்த்திக்கும், அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவுத் தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

**மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்**

உத்திரவாதமுள்ள ஆபரணங்களுக்கும் வைரங்களுக்கும்
அசல் வெள்ளி சாமான்களுக்கும்














# P.A. ராஜ் செட்டியார் & பிரதர்

கடை வீதி. "ஸ்வர்ண மாளிகை" கோயமுத்தூர்.

தந்தி "ராஜா"..... தபால் பெட்டி 139. ...... போன் 218.A

# அகப்பட்ட புதையல்

ராஜி

ராமச்சந்திரன் மிகவும் புத்திசாலி. ஆனால் அவன் மிகவும் விஷமம் செய்வான். அவனை அவன் தாய் தந்தையர்கள் சந்துரு என்று அழைப்பார்கள். சந்துருவுக்கு லக்ஷ்மணன் என்று ஒரு சகோதரன் உண்டு. இரண்டு குழந்தைகளும், தாய் தந்தையர்கள் சொல்லுவதை லட்சியமே செய்ய மாட்டார்கள். அவர்களுடைய சிநேகிதர்களுடன் எப்பொழுது பார்த்தாலும் விளையாடிக் கொண்டிருப்பார்கள்.



ஒரு நாள் சாயங்காலம் சந்துருவும், லக்ஷ்மணனும் சிநேகிதர்களுடன் தோட்டப் பக்கம் விளையாடச் சென்றிருந்தார்கள். அப்பொழுது சந்துருவின் தாயாரும், தகப்பனாரும் ஏதோ சில வார்த்தைகளை 'குசு குசு' வென்று ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். பேச்சில் சந்துருவின் பெயரும், லக்ஷ்மணனின் பெயரும் அடிக்கடி வந்தது. இதைக் கேட்ட சந்துருவும், லக்ஷ்மணனும் தன் சிநேகிதர்களுடன் மறைவாக நின்று கொண்டு ஒட்டுக் கேட்கத் தொடங்கினார்கள்.

அப்பொழுது சந்துருவின் தகப்பனார் பின்வருமாறு சொன்னார்:—

"இன்று நமக்குக் கிடைத்த கடிதத்திலிருந்து வெகு நாளாக நாம் எண்ணிக் கொண்டிருந்த புதையல் நமது தோட்டத்திலேயே இருக்கிறது என்று



தெரிகிறது. இந்தச் சமாசாரம் சந்துருவின் காதிலும் அவன் சிநேகிதர்கள் காதிலும் எட்டாமல் செய்ய வேண்டும். அவர்கள் காதில் விழுந்தால் தோட்டத்தைக் கொத்திப் பார்த்து, புதையலைத் தேடி எடுத்துக் கொண்டு போய்ப் பணத்தைக் குஷியாகச் செலவழித்து விடுவார்கள்!"

இந்த ரகசியத்தைக் கேட்ட சந்துருவும், லக்ஷ்மணனும் அவன் சிநேகிதர்களும் சந்தோஷத்தினால் கூத்தாடினார்கள். "இப்புதையலை நாம் இன்று இரவு எப்படியாவது கண்டுபிடித்தாக வேண்டும்" என்று நிச்சயித்தார்கள்.

இரவு மணி எட்டு இருக்கும். நல்ல நிலா வெளிச்சம். சந்துரு, லக்ஷ்மணன் அவனுடைய சிநேகிதர்கள் எல்லோரும் தோட்டத்திற்கு வந்தார்கள். எல்லாப் பையன்களும் மண்வெட்டியை எடுத்துக்கொண்டு தோட்டத்தைக் கொத்திக் கொண்டே போனார்கள். வெகு நேரம் நன்றாகக் கொத்தியும் ஒன்றும் அகப்படவில்லை. கீழக் கோடியிலிருந்து மேலக்கோடிக்கு வந்தார்கள். எவ்வளவு தோண்டியும் புதையல் அகப்படவில்லை. மிகவும் வருத்தத்துடன் மேலக் கோடியில் தோண்டிக் கொண்டிருக்கும் போது சந்துரு கூர்ந்து கீழே நோக்கி

னுன். ஏனெனில், அவன் மண்வெட்டியால் கொத்தின பொழுது 'தடால்' என்று ஓசைபபட்டது.

ஒரே தட்டுப்பட்ட சாமான் என்னவென்று சந்துரு குனிந்து கவனித்தான். அது ஒரு சிறு வெண்கலப் பாத்திரமாகத் தெரிந்தது. மிகவும் கனமாக இருந்தது. மேலே மூடப்பட்டுக் கயிற்றினால் கட்டப்பட்டிருந்தது. "புதையல்! புதையல்!" என்று ஏக காலத்தில் எல்லோரும் சந்தோஷமாகச் சொல்லிக் கொண்டார்கள். கயிற்றை அவிழ்த்துப் பார்த்தவுடன் சந்துருவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஏனென்றால் அப்பாத்திரத்திற்குள் புதையல் ஒன்றும் இல்லை. அதற்குப் பதிலாக அப்பாத்திரம் நிரம்பக் கற்கள் இருந்தன. அதைப் பார்த்த பையன்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பாத்திரத்தில் கடிதம் ஒன்று இருந்தது. அதைச் சந்துரு படித்தான்:

"குழந்தைகளே! எங்கள் தோட்டத்தை நன்றாகக் கொத்தினதற்கு மிகவும் சந்தோஷம். வீட்டில் போய்ச் சுகமாகத் தூங்குங்கள். நாளைக்குக் காலையில் நீங்கள் செய்த உதவிக்காக எங்கள் வீட்டில் விருந்து வைத்திருக்கிறேன். வந்து சாப்பிட்டுவிட்டுப் போங்கள்! இப்படிக்கு,

சந்துருவின் தாய் தந்தையர்."

என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. சந்துருவும் அவன் சிநேகிதர்களும் அவமானமடைந்து வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.




நாம் உபாத்தியாயர் வருகிறார்! நாம் இப்படிப் படிப்பதுபோல் நிற்கலாம் என்று பையன்கள் யோசனை செய்கிறார்கள். உபாத்தியாயர் திடீரென்று பயந்து ஓடியதின் காரணத்தைப் படத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

# செக்கு இழுத்த தியாகி

மகாத்மா காந்தி இந்திய சுதந்திரப் போராட்டத்திற்குத் தலைமை வகித்த பிறகு தேச பக்தர்கள் சிறை வாசம் செய்வதென்பது சர்வ சகஜமாய்ப் போய் விட்டது.

சென்ற இருபத்தைந்து வருஷத்தில் எத்தனையோ ஆயிரக்கணக்கான — லட்சக் கணக்கான — தேச பக்தர்கள் சிறை வாசம் செய்திருக்கிறார்கள்.

இவ்விதம் தமிழகத்தில் தேச விடுதலைக்காகச் சிறை சென்றவர்கள் சிறைகளில் கஷ்டப்பட நேர்ந்தபோதெல்லாம் தமிழ் நாட்டுப் பழம் பெரும் தேச பக்தர் ஒருவர் அனுபவித்த சிறைக் கஷ்டத்தை நினைத்து ஆறுதல் அடைவார்கள்.

“ஆகா! வ. உ. சிதம்பரம் பிள்ளை அந்தக் காலத்தில் சிறையில் செக்கு இழுத்தாரே? அவர் பட்ட கஷ்டத்தை நினைக்கும்போது நாம் இப்போது அனுபவிக்கும் கஷ்டங்கள் எம்மாத்திரம்? இவை ஒன்றுமே இல்லை!” என்று தைரியம் பெறுவார்கள்.

இந்தக் காலத்தில் சிறை வாசம் அதனுடைய பயங்கரங்களை இழந்து விட்டது. சிறை தண்டனை ஒரு கௌரவமாகவும் தேச விவகாரங்களில் பதவிகள் பெறுவதற்குச் சாதனமாகவும் ஏற்பட்டு விட்டது.

அந்த நாளிலோ ஒருவன் சிறைக்குப் போனான் என்றால், “நரகத்துக்குப் போனான்” என்றே கருதினார்கள். அரசியல் கைதிகளுக்கென்று விசேஷ சலுகைகள் அந்த நாளில் கிடையாது. ஏ. வகுப்பு பி. வகுப்புகளும் இல்லை. உண்மையில், அரசியல் கைதிகள் மற்றக் கைதிகளைக் காட்டிலும் கொடுமையாக நடத்தப் பட்டார்கள்.

அத்தகைய காலத்தில் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை ஆறு வருஷம் தேசத்துக்காகச் சிறைவாசம் செய்தார்.

நல்ல குடும்பத்தில் பிறந்து வளர்ந்து படித்துப் பட்டம் பெற்றுப் பிரபல வக்கீலாக விளங்கிச் சீரும் சிறப்பும் பெயரும் புகழுமாக வாழ்க்கை நடத்தியவர் திடீரென்று திருடர்களும் கொலைகாரர்களும் அடைக்கப்படும் சிறைக்குள்ளே கொண்டு போய்த் தள்ளப் பட்டார்.

“சிறையில் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையைச் செக்கு இழுக்கச் செய்தார்கள்!” என்ற செய்தி ஒருநாள் பரவியபோது, தமிழகத்தை ஒரு குலுக்குக் குலுக்கிப் போட்டு விட்டது.

தேசபக்த மகாகவி பாரதியாரின் காதிலும் அந்தச் செய்தி விழுந்தது. “கடவுளே! உனக்குக் கண்ணிருக்கிறதா? இப்பேர்ப்பட்ட அநியாயங்கள் உலகத்தில் நடப்பதை நீ பார்த்துக் கொண்டிருக்கிறாயா?” என்ற எண்ணத்தினால் கவியின் உள்ளம் வெதும்பியது.

“மேலோர்கள் வெஞ்சிறையில்
வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ?”

என்று பாரதியார் கதறினார். சிறந்த அறிவாளியும் பல நூல்களின் ஆசிரியருமான ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையை மனதிலே வைத்துக் கொண்டுதான்,

“நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ?”

என்று பாரதியார் பாடியிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையின் வாழ்க்கையும் வீரப் போராட்டங்களும் பாரதியாரின் பாடல்கள் இன்னும் பலவற்றிற்கும் காரணமாயிருந்தன.

அத்தகைய சுதந்திர வீரருக்கு, தமிழகத்தின் ஆதி தேச பக்தருக்கு, அவர் பிறந்து வளர்ந்து போராடிய தூத்துக்குடியில் ஒரு ஞாபகச் சின்னம் நிலைநாட்டுவதற்காக நிதி சேர்த்து வருகிறார்கள்.

இந்தப் புண்ணிய நிதிக்குப் புது வருஷத்தில் உங்களுடைய காணிக்கையை உடனே செலுத்தி வையுங்கள்.

## வசூல் விவரம்

| | | | |
|---|---|---|---|
| டி. வி. சுந்தரமய்யங்கார் அண்டு சன்ஸ், மதுரை | 501 | 0 | 0 |
| ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், மயிலாப்பூர் | 250 | 0 | 0 |

ஐயர்ச் செட்டியார், டி. ஜே. தியாகராஜன், ஆர். கோவிந்தசாமிப் பிள்ளை, எம். கோவிந்தசாமி, அர்ஜுனராயப். அபூபக்கர் ராவுத்தர், ராம. கோபாலகிருஷ்ண செட்டியார், ஆர். அருணகிரி, வி. பாலசுந்தரம், வீர. ராமனாதம் செட்டியார், டி. என். ஷண்முகம் பிள்ளை, ஜி. வெங்கட்ராம ஐயர், டி. கே. முத்துசாமி ஐயர், வி. பெ. சிதம்பரம் செட்டியார், ஆர். சுந்தரமய்யர், வி. ஆர். நாகலிங்கம் செட்டியார்: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் பி. என். மணி ஐயர், ஜி. தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை, சி. நடேசப் பிள்ளை, கே. சௌந்திரராஜன், ஏ. ராகப் பண்டாரம், கோ. ரெத்தினம் பிள்ளை, பி. எம். சுப்பையா முதலியார், ரு. ரெத்தினவேலுத் தேவர், கோ. நாராயணச் செட்டியார், குருசாமிப், ஏ. சுப்பராயலு, எம். பி. என். தாவுத், வி. என். சத்தியமூர்த்திச் செட்டியார், ஜி. ஷண்முகானந்தம், ஏ. சுப்பிரமணியப் பத்தர், ஆ. நடேசபத்தர், ச. வி. ரெத்தினம் செட்டியார், முருகையான் செட்டியார், ப. ச. வீரப்பச் செட்டியார், ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்டோர், கே. பஞ்சாபகேச ஐயர், ஜி. கோபாலச் செட்டியார், எம். ராமன், எம். சுப்பிரமணியம், கே. முருகையான், வி. பக்கிரிசாமி நாயுடு, டி. வி. கிருஷ்ணசாமி ஐயர், பி. ஜி. நடராஜன், என். ராமச்சந்திரம் பிள்ளை, ஆர். சுந்தரம், என். கிருஷ்ணசாமி முதலியார், ஏ. காத்தையான் செட்டியார், வி. எம். ராதாகிருஷ்ண ஐயர், கோ. சாம்பசிவம் செட்டியார், ஆர். தம்புச் செட்டியார், ஏ. பி. கிருஷ்ண செட்டியார், அமூன்நாஸ் நாடார், டி. குஞ்சிதபாதம், ச. தண்டபாணி செட்டியார், ஏ. நடராஜ ஐயர், ஆர். வேலாயுதத் தேவர், அ. ச. சந்திரசேகரன் செட்டியார். அணா 0—8—0: ஸ்ரீ ச. வேணுகோபால் செட்டியார்.]

★

ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலை வசூல் விவரம்.

[கல்யாணசுந்தரம், நாஸ், சுப்ரமணியம், ஆதிசேஷன், சங்கரநாராயண ராவ், காந்தி, ஷாம், கிருஷ்ணசாமி, சீனிவாச ராவ், குண்டு ராவ், ஜாக்கோப்ஸன், திருவேங்கடசாமி, கெங்காதரம், சந்தானம், பாலாஜி ராவ், என். சுப்பிரமணியம், சிங்காரச்சாரி, வாஸ், மஞ்சேரி ராமகிருஷ்ணன், சுப்பராவ், லக்ஷ்மண ராவ், சுந்தரராஜன், ராமசேஷன்.]

---

## திருத்தம்

சென்ற 16-12-45 இதழில் வெளியான மொத்த வசூல் ரூ. 2522-9-3ல் விடுபட்டுப் போன நன்கொடையாளர் பெயர்கள் :—

| | | | |
|---|---|---|---|
| ராவ் சாஹிப் ஸ்ரீ வி. பி. சுப்ரமணிய முதலியார் ஜி. பி. வி. ஓ. டிப்டி சூப்ரிண்டெண்ட், வெள்ளக்கால் | 15 | 0 | 0 |
| கண்ணன் வியாஸ், ஸ்ரீ ராமகிருஷ்ணா அண் கோ., துணி வியாபாரம், திருப்பூர் | 2 | 0 | 0 |
| ஸ்ரீ வி. பாலகிருஷ்ணன், செகந்தராபாத், டக்கான் | 2 | 0 | 0 |


★ STAR PUBLICATIONS ★

PALAKARAI :: TRICHINOPOLY

# ரஸிகமணி டி. கே. சி.

## பொங்கல் வெளியீடு !

ரஸமான சம்பவங்களும், இலக்கியக் கொள்கைகளைப் பற்றிய இனிய புதிய விளக்கமும் நிறைந்த அழகிய புத்தகம்.

★

ஆசிரியர் :

திருநெல்வேலி முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட்
தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான்
அவர்கள்

முன்னுரை :

திருவாங்கூர் பிரதம நீதிபதி
திருப்புகழ்மணி
டி. எம். கிருஷ்ணஸ்வாமி ஐயர்
அவர்கள்

★

168 பக்கங்கள்

விலை ரூ. 2/-

(தபால் செலவு தனி)

தைப் பொங்கலன்று வெளி வருகிறது!
எல்லா வியாபாரிகளிடமும் கிடைக்கும்.
நேரிலும் எங்களிடம் ஆர்டர் அனுப்பலாம்

வியாபாரிகளுக்குத் தகுந்த கமிஷன் கொடுக்கப்படும்.

★ ஸ்டார் பிரசுரம் ★

பாலக்கரை :: திருச்சி

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.



## 128. ஆசையே மருந்து

சூர்ப்பனகை ராமன்மேல் கொண்ட காதல் காரணமாக எத்தனையோ அவஸ்தைகளுக்கு உள்ளாகிறாள். அந்த அவஸ்தைக்கெல்லாம் களமாயிருந்த பிரதேசத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும்:

உயர்ந்த வளமான மலைப் பிரதேசம். அழகான தோட்டங்கள். பூங்கொடி படர்ந்த பளிங்கு மேடைகள். அடுத்தாற்போல் அபூர்வமாய்த் திரண்டு உருண்ட கருங்கல் தூண்களால் அமைக்கப்பட்ட சிங்கார மண்டபங்கள்.

இப்பேர்ப்பட்ட பூங்காவனத்துக்குள் மேகங்கள் இறங்கி வந்து உலாவுவதும் உண்டு. மலைச் சிகரங்களைத் தழுவி நிற்கும் நீல மேகங்களும் உண்டு.

அப்படி நின்ற ஒரு நீல மேகத்தைப் பார்க்கிறாள்; நீல மணி போன்ற கருங்கல் தூணையும் (கந்து) பார்க்கிறாள்.

வந்து கார்மழை
  தோன்றினும்; மாமணிக்
கந்து காணினும்
  கைத்தலம் கூப்புமால்;—
இந்து காந்தத்தின்
  ஈரநெடுங்களும்
வெந்து காந்த
  வெதுப்புறும் மேனியாள்.

[இந்து காந்தத்தின் ஈர நெடுங்களும்: தண்ணீர்த் துளிகள் துளித்து ஈரமாக இருக்கும் சந்திரகாந்தக் கல்கட்டில்கூட; வெந்து காந்த வெதுப்புறுமேனி: சூடேறிக் காந்தும்படியாகக் காய்ச்சலுக்குள்ளான தேகம்.]

நீலமேகம், கருங்கல் தூண், சந்திர காந்தக் கல், இவைகள் எல்லாம் சேர்ந்து அவளைப் படுத்துகிற பாடு ஒரு புறமிருக்க, பெரிய ஏமாற்றத்துக்கான நிகழ்ச்சியும் ஒன்று நிகழ்கிறது.

ராமன் அவள் கண் முன் உருவெளித் தோற்றமாகத் தென்படவும் செய்கிறான்.

காதலால் உண்டான கோளாறுதான். இல்லாததையெல்லாம் கொண்டு வந்து கண்முன் காட்டுகிறது அது.

வீரன் மேனி
  வெளிப்பட, வெய்யவள்
கார்கொள் மேனியைக்
  கண்டனளாம்எனச்
சோரும் வெள்கும்
  துணுக்கெனும்: அவ்வுருப்
பேரும் கால், வெம்
  பிணியிடைப் பேருமால்.

[வீரன் மேனி வெளிப்பட:—ராமனது உருவம் உருவெளித் தோற்றமாய்க் கண்முன் நிற்க; வெய்யவள்: கொடிய வெப்பத்துக்குள்ளாகிய அந்த அப்பாவி சூர்ப்பனகை; கார்கொள் மேனியை: நீலமேக வர்ணனான ராமனது உண்மை மேனியையே; கண்டனளாம் எனா: மறுபடியும் பார்த்து விட்டோம் அல்லவா என்ற எக்களிப்புடன்; சோரும், வெள்கும், துணுக்கெனும்: கிட்டியும் நம்மைப் பொருட்படுத்தாதவன் தானே என்று சோர்கிறாள், அடுத்தாற்போல் காதல் உணர்ச்சி எழுகின்ற காரணத்தால் வெட்கப்படுகிறாள். அடுத்த நிமிஷம் பயப்படுகிறாள்—தம்மை அங்கீகரிக்கப் போவது இல்லை தானே என்று; அவ்வுரு பேருங்கால்: தடுமாற்றமுள்ள மனசு செய்து காட்டிய உருவெளித் தோற்றந்தானே அது. நிலையாய் நிற்கவா செய்யும். அப்படியே மறைந்து விடுகிறது—அது மறையவும்; வெம்பிணியிடைப் பேருமால்: பழைய துன்பத்துக்கெல்லாம் உள்ளாகி விடுகிறாள்.]

சிறிது நேரம் கழிந்தது. ஒரு நீலமேகம் அவள் பக்கமாக வந்தது. அவள் எழுந்திருந்து போய்க் காதல் வெறியினால் அந்த நீலமேகத்தை ராமன் என்றே எண்ணித் தழுவினாள். அந்த மேகத்தின் பாடு என்ன ஆயிற்று பாருங்கள்!

ஆகக் கொங்கையின்,
ஐயன்என்(று) அஞ்சன
மேகத் தைத்தழு
வும், அவை வெந்தன
போகக் கண்டு,—
புலம்பும்; அப் புன்மையாள்
மோகத் துக்கோர்
முடிவும்உண் டாங்கொலோ

[அஞ்சன மேகத்தைத் தழுவும்: சிறிது சிறிதாய்த் திரண்டுவந்த நீலமேகத்தைத் தழுவுவாள்; அவை வெந்தன போகக் கண்டு புலம்பும்: அந்த மேகங்கள் அப்படி அப்படியே வெந்து கரைந்து போகக் கண்டு புலம்புவாள்; அப்புன்மையாள் மோகத்துக்கு: அந்த அற்பப் பெண்ணான சூர்ப்பனகையின் மோகத்துக்குத்தான்.

குறிப்பு:—மேகத் திரளைத் தழுவினாள்; அவை வெந்து போய் விட்டனவாம். இந்த ஹாஸ்யத்துக்கு அடிப்படையான காதல் தத்துவத்தின் வேகத்தைப் பார்க்க வேண்டும்.]

ஊழித் தீயில் விழுந்தவள் போல் ஆகிறாள் — காதல் நோயின் கடுமை அப்படி இருக்கிறது! ஆனாலும் அவளுக்கு உயிர் போகவில்லை. உயிர் போகவில்லையே என்று யாருமே அனுதாபப் படுவார்கள்; உயிர் போகாததற்குக் காரணம் என்னவென்று பார்ப்போம்.

ஊழி வெங்கனல்
உற்றனள் ஒத்தும், அவ்
ஏழை ஆவி
இறந்திலள் என்பரால்;
ஆழி யானை
அடைந்தனள் பின்னையும்
வாழ லாம்எனும்
ஆசை மருந்தினே!

[அவ் ஏழை ஆவி இறந்திலள்: அந்த அப்பாவிப் பெண்ணுக்கு, ஐயோ, உயிர் போகவில்லையே; என்பரால்: என்று சொல்லுவார்கள்—ஏன்: ஆழியானை அடைந்தனள்: விஷ்ணு அம்சமான ராமனை எப்படியும் அடைந்தவளாய்; பின்னையும் வாழலாம் எனும் ஆசை மருந்தினே: பிறகும் ஆனந்த வாழ்க்கை வாழலாம் என்னும் ஆசையாகிய மருந்தினால்.]

உடலுக்கு எவ்வளவோ தளர்ச்சி ஏற்பட்டாலும், உயிர் எவ்வளவோ அருகிப் போய் நின்றாலும், ஆசை என்பது ஒன்று இருக்கும்வரை அந்த உயிர் உடலை விட்டுப் போவதில்லை என்பது அனுபவத்தில் காண்கிற விஷயம். காதலாகிய ஆசைத் தத்துவத்திலும் ஜீவனை பிடித்து நிற்கச் செய்யும் வேகம் இருக்கிறது என்பதைக் கவிஞர் எடுத்துச் சொல்லுகிறார்.









# ZEPHROL

## "ஸெப்ரால்"

### இருமல் நிவாரண ஸிரப்

எபிட்ரைன் அடங்கியது

## இருமலினின்றும்

காப்பாற்றிக்கொள்ள



பாட்டில் விலை ரூ. 1/8.

கீர்த்தி வாய்ந்த "M & B - 693"

தயாரித்தவர்களால் அளிக்கப்படுவது

## மே & பேக்கர் லிமிடெட்

# MAY & BAKER LTD.

# காலக்ஷேபம்

## முன்னேற்பாடு

மாமனார் வீட்டுக்கு வந்த மாப்பிள்ளை கோபித்துக் கொண்டு வெளியே வந்து, வாசலில் நின்ற ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு, "என்ன சத்தம் கேட்கிறாய், ஸ்டேஷனுக்கு?" என்றார் ரிக்ஷாக்காரனை நோக்கி.

"சத்தமெல்லாம் நேற்றைக்கே உங்க மாமனாரு பேசி எங்கிட்ட குடுத்துட்டாரு: நீங்க பேசாம குந்திக்கிட்டு வாங்க!" என்றான் ரிக்ஷாக்காரன்.

—டி. கே. சுப்ரமண்யன்.

★

## உயர்ந்த வேலை

முனியன் (குப்பனைப் பார்த்து):—என்னைக் கண்டால் கலெக்டர்கூட எழுந்திருப்பார்.

குப்பன்:—அப்படி உனக்கு என்ன வேலை?

முனியன்:—அவருடைய அறையை நான் தான் பெருக்குவது. —வி. கே. ஆர். சாமி.

★

## காரணம்

"நேற்று கோர்ட்டிலே, சாட்சி விசாரணை நடந்து கொண்டிருந்த போது, நீதிபதி மயக்கமடைந்து மேஜையின்மீது சாய்ந்து விட்டார்!"

"சாட்சிகளில் யாராவது நிஜம் பேசினார்களா, என்ன?" —என். வி. சுப்பிரமணியன்.

★

## யார் அது?

"சரஸ-வின் பெண் ஹார்மோனியம் வாசிக்க ஆரம்பித்ததி லிருந்து பக்கத்து வீட்டுக்கு ஒருவருமே குடிவரவில்லை. இப்போது யாரோ குடிவந்து விட்டனராமே!"

"வேறுயார் வருவார்? அவளுக்குச் சொல்லிக் கொடுக்கும் அந்த ஹார்மோனிய வாத்தியார்தானாம் அவர்!" —எஸ். காஜா.

★

## பழகிய தோஷம்

வீடு வாங்க வந்தவர்:— இந்த வீட்டுக்குள் நுழைந்தாலே ஜெயிலில் புகுந்தமாதிரி இருக்கிறதே?

வீட்டுக்காரர்:— நிஜம் தான். அவரவர்களுக்கு எதிலே அதிகப் பழக்கமோ அது தானே முதலில் தோன்றும்! —சி. நடராஜன்.

## பணம் இல்லை!

'க்யூ' வரிசை அணு அணுவாக முன்னேறிக் கொண்டிருந்தது. டிக்கெட் கொடுக்கு மிடத்திற்கு ஒரு கிராமவாசி வந்து, வெறுங்கையை உள்ளே நுழைத்தார்.

"டிக்கெட்டுக்குப் பணம் எங்கே, ஐயா?" என்று டிக்கெட் கொடுப்பவர் கேட்டார்.

"'க்யூ' விலே நின்னு டிக்கெட் கொடுப்பாங்கன்னு சொன்னீங்களே?" என்றார் அந்தக் கிராமவாசி.

—வி. எஸ். சுந்தரராஜன்.

★

## இடமில்லை?

ஒரு பருத்த மனிதர் பஸ்ஸிலிருந்து இறங்கி பஸ்-இன்ஸ்பெக்டரிடம் போய், "ஐயா! அந்த பஸ்-கண்டக்டர் என்னை அவமானப் படுத்தி விட்டான்" என்றார்.

பஸ்-இன்ஸ்பெக்டர்:—அவன் என்ன வார் சொன்னான்?

பிரயாணி:—பஸ்ஸில் நான் உட்கார்ந்திருக்கும் வரையில் "இடமில்லை. இடமில்லை" என்று சொல்லி விட்டு, நான் இறங்கிய பிறகு மூன்று ஸீட் காலி என்று கத்துகிறான்!

—என். ஆர். லக்ஷ்மிநாராயணன்.

★

## சரிதான்!

இலவச வாசகசாலையில் பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்த ஒருவர், திடீரென்று அங்கிருந்த பத்திரிகையை எடுத்துக் கொண்டு கிளம்பினார். அவ்வாசக சாலையின் காரியதரிசி அவரைத் தடுக்க, அவ்வாசக சாலையின் விதிகள் எழுதப்பட்டுள்ள போர்டைக் காண்பித்தார். அதில் "இங்குள்ள பத்திரிகைகளை உங்கள் சொந்தப் பொருளாகப் பாவியுங்கள்" என்று எழுதப் பட்டிருந்தது! —பி. வி. ராமன்.

★

## தெரிந்தது

கணவன்:—குடையை ஆபீஸில் வைத்து மறந்து வந்து விட்டேன்.

மனைவி:—மறந்து விட்டீர்கள் என்பது எப்படித் தெரிந்தது?



கணவன்:—மழை நின்றவுடன் குடையை சுருக்கலாமென்று கையை மேலே தூக்கினேன். அப்பொழுதுதான் குடையை ஆபீஸில் வைத்து வந்து விட்டதாகத் தெரிந்தது.

—என். குப்புசாமி.

# ஜயத்ரதன் வதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"கர்ணா! இரண்டில் ஒன்று முடிவாகும் சமயம் இப்போது நேர்ந்திருக்கிறது" என்றான் துரியோதனன். "இன்று அருச்சுனனுடைய பிரதிஜ்ஞை நிறைவேறாமற் போனால் அருச்சுனன் வெட்கத்தால் உயிரை மாய்த்துக் கொள்வான். அருச்சுனன் இறந்தால் பாண்டவர்களின் நாசம் நிச்சயம். அதன்பின் இந்தப் பூமி முழுதும் சத்துருக்களுடைய தொந்தரவு இன்றி நம் வசத்திலிருக்கும். புத்தி மயக்கத்தினால் தன்னுடைய விநாசத்துக்காகவே தனஞ்சயன் இந்த வீண் பிரதிஜ்ஞையை எடுத்துக் கொண்டான். இது என்னுடைய நல்ல காலம் என்றே நினைக்கிறேன். இதைக் கைவிடலாகாது. எப்படியாவது அவனுடைய சபதம் நிறைவேறாமல் செய்ய வேண்டும். இன்று நீ உன் சாமர்த்தியத்தைக் காண்பிக்க வேண்டும். அதோ, சூரியன் சாய்ந்து விட்டான். மிஞ்சியிருக்கும் காலத்துக்குள் பார்த்தன் ஜயத்ரதனை அடைய முடியாது. நானும் அசுவத்தாமரும் சல்யனும் கிருபரும் நீயும் அஸ்தமனம் வரையில் எவ்விதத்திலாவது ஜயத்ரதனைக் காப்பாற்றித் தனஞ்சயனுடைய பிரதிஜ்ஞை நிறைவேறாமல் செய்து விடவேண்டும்" என்றான்.

இதைக் கேட்டுக் கர்ணன் "அரசனே! பீமசேனனால் பலமாக அடிக்கப்பட்டு உடம்பு முழுதும் காயமடைந்திருக்கிறேன். என் உடலின் லாகவம் மிகவும் குறைந்து போயிருக்கிறது. ஆயினும் என்னால் இயன்ற வரையில் உன்னுடைய காரியத்தை நிறைவேற்றுவேன். நான் பிழைத்திருப்பது உனக்காகவே" என்றான்.

இவ்வாறு யுத்தகளத்தில் துரியோதனனும் கர்ணனும் பேசிக் கொண்டிருக்கும் பொழுது அருச்சுனன் கௌரவ சேனையைப் பலமாகத் தாக்கிக் கொண்டிருந்தான். எப்படியாவது கௌரவ சேனையை உடைத்து ஜயத்ரதனை அடையவேண்டும் என்று தனஞ்சயன் கடும்போர் புரிந்தான்.

* * *

கிருஷ்ணன் பாஞ்சஜன்யத்தை எடுத்து ரிஷப சுவரத்தில் பேரொலி செய்தான். அதைக் கேட்டதும் குறிப்பாகத் திட்டம் செய்திருந்தபடி கிருஷ்ணனுடைய சாரதி தாருகன் தயாரித்து வைத்திருந்த கிருஷ்ணனுடைய தேரை மாய வேகமாக ஓட்டிக்கொண்டு வந்து சேர்த்தான். அதில் சாத்யகி ஏறிக் கர்ணனை எதிர்த்து மிகவும் சாமர்த்தியமான போர் நடத்தினான்.

தாருகனுடைய சாரத்யமும் சாத்யகியினுடைய வில் வன்மையும் சேர்ந்து தேவர்கள் நின்று பார்க்கும்படியான யுத்தம் துவங்கிற்று. கர்ணனுடைய நான்கு குதிரைகளும் வீழ்த்தப்பட்டன. சாரதியும் தேர்த் தட்டினின்று தள்ளப்பட்டான். பிறகு அவனுடைய கொடிமரமும் தேரும் துண்டு துண்டாக்கப்பட்டன. கர்ணன் தேரிழந்தவனாகச் செய்யப்பட்டான். கௌரவ சேனையில் "ஆ! ஆ!" என்று பேரொலி கிளம்பிற்று. கர்ணன் தோல்வியடைந்து துரியோதனனுடைய தேரில் ஏறிக்கொண்டான்.

இதைப் பற்றி திருதராஷ்டிரனுக்குச் சொல்லும்போது சஞ்சயன் "உலகத்தில் கிருஷ்ணனும் பார்த்தனும் சாத்யகியுமே வில்லாளிகள். இவர்களுக்குச் சமானமான நான்காவது வில்லாளி இல்லை என்பது பிரசித்தம்" என்றான்.

* * *

அருச்சுனன் கௌரவ சேனையில் பெரும்பான்மையான பாகத்தைத் தோல்வியடையச் செய்து ஜயத்ரதனை அடைந்தான். அபிமன்யுவின் வதத்தையும் தாங்கள் அனுபவித்த பல துன்பங்களையும் எண்ணி, நெருப்பைப் போல் கோபத்தால் ஜொலித்த அருச்சுனன் காண்டீவத்தை இரு கைகளாலும் பிரயோகம் செய்தான். கௌரவ வீரர்களுக்கு அருச்சுனன் நாலா பக்கங்களிலும் வாய் திறந்து நின்ற அந்தகனைப்போல் காணப்பட்டான்.

சைந்தவனைக் காப்பதற்காக அவனைச் சூழ்ந்து கொண்டு நின்ற அசுவத்தாமன் முதலிய மகாரதர்களுக்கும் அருச்சுனனுக்கும் அப்போது நடந்த மகத்தான போரை வியாசரைத் தவிர வேறு யாரும் வருணிக்க முடியாது.

நடுவில் நின்று தடுத்த மகாரதர்களனைவரையும் தோல்வியடையச் செய்து விட்டு அருச்சுனன் ஜயத்ரதனைத் தாக்கினான்.

யுத்தம் வெகு நேரம் நடந்தது. இருதரத்திலும் சூரியனை அடிக்கடி பார்க்கலாயினர். சைந்தவனும் மகா சூரன். எனினும் அருச்சுனனுக்குத் தோற்பவன்

அல்ல. அஸ்தமனம் நெருங்கிச் சூரியன் செக்கிறம் கொண்டான். அப்போதும் யுத்தம் முடியவில்லை.

"இன்னும் சிறிது நேரமே இருக்கிறது. ஜயத்ரதன் பிழைத்தான். அருச்சுன னுடைய பிரதிஜ்ஞை வீணாயிற்று" என்று துரியோதனன் தனக்குள் எண்ணி மகிழ்ந் தான். அப்போது ஆகாயத்தில் திடீர் என்று ஒரு இருள் மூடிக்கொண்டது.

பாண்டவர்களுடைய சேனையில் "ஜயத் ரதனுடைய வதம் நடைபெறவில்லை. பகல் முடிந்து விட்டது. அருச்சுன னுடைய பிரதிஜ்ஞை வீணாயிற்று" என்று அனைவரும் பேசத் தொடங்கி னார்கள். கௌரவ சேனையில் மகத்தான சந்தோஷ ஆரவாரம் உண்டாயிற்று.

ஜயத்ரதனும் சூரியன் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டு "பிழைத் தேன்!" என்று எண்ணினான்.

கிருஷ்ணன் "தனஞ்சய! ஸிந்து ராஜன் சூரிய மண்டலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். இருள் என்னால் உண்டாக்கப்பட்டது. சூரியன் இன்னும் அஸ்தமனம் ஆகவில்லை. உன் பிரதிஜ் ஞையைப் பூர்த்தி செய், இதுவே சமயம்" என்றான்.

உடனே காண்டீவத்தினின்று ஒரு அம்பு விடுபட்டது; பருந்து கோழிக் குஞ்சைக் கவர்வதுபோல் சைந்தவ னுடைய தலையை அது கவர்ந்தது.

"ஜயத்ரதனுடைய தலை கீழே விழ லாகாது. அதை அந்தரத்திலேயே அம்பு களால் தூக்கிச் செலுத்தி ஜயத்ரத னுடைய தந்தை விருத்தக்ஷத்திரனுடைய மடியில் விழச்செய்" என்றான் கிருஷ்ணன்.

அச்சமயம் விருத்தக்ஷத்திர ராஜன் தன் ஆசிரமத்தில் மாலை உபாசனையில் இருந்தான். கறுத்த தலை மயிரும் காதில் தங்கக் குண்டலங்களும் கொண்ட ஜயத் ரதனுடைய தலை தியானத்தில் ஆழ்ந் திருந்த தந்தையின் மடியில் விழுந்தது. ஜபத்தை முடித்து அவன் கண் திறந்து எழுந்ததும் அந்தத் தலையானது உருண்டு தரையில் விழுந்தது. உடனே விருத்த க்ஷத்திரனுடைய தலை அவன் தவத்தின் பயனாகவே நூறு துண்டாக வெடித்தது; ஜயத்ரதனும் அவன் தந்தையாகிய ஸிந்து ராஜனும் வீர சுவர்க்கத்தை ஒரே சம யத்தில் அடைந்தார்கள்.

* * *

கேசவனும் தனஞ்சயனும் பீமனும் சாத்யகியும் யுதாமன்யுவும் உத்தமௌ ஜஸனும் சங்கங்களை ஊதி வெற்றி முழக்கம் செய்தார்கள். தருமராஜன் அதைக் கேட்டு "அருச்சுனன் ஸைந் தவனை வதம் செய்தாயிற்று" என்று அறிந்து கொண்டு மகிழ்ந்தான்.

அதன் பிறகு எல்லாப் பாண்டவ சேனை யுடன் யுதிஷ்டிரன் துரோணரைப் பல மாக எதிர்த்தான். பதினான்காவது நாள் யுத்தம் பகலுடன் நிற்கவில்லை. இரவிலும் நடந்தது. யுத்தத்தின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க முதலில் காப்பாற்றிவந்த வரம் புகள் ஒவ்வொன்றாக அழிந்து போயின.

★ ○ ★

## உங்களுக்குத் தெரியுமா?

'டிபன்' என்ற வார்த்தையை நாம் மாலை மூன்று மணியானதும் சொல்லு கிறோம் அல்லவா? அந்த வார்த்தை எப்படி வந்தது என்பதைப் பற்றிய எனது சொந்த ஆராய்ச்சியைச் சொல்லுகிறேன்.

ஒரு ஐரோப்பிய துரை வீட்டிற்கு ஒரு குமாஸ்தா காரியார்த்தமாகச் சென் றிருந்தார். அப்பொழுது மாலை நான்கு மணி இருக்கும். துரைக்குப் பசி எடுத்தது. 'பட்லரை'க் கூப்பிட்டு, தங்கள் இருவருக்கும் 'டீ'யும், 'பன்'னும் (ஒரு வகை ரொட்டி) கொண்டுவரச் சொன்னார். குமாஸ்தா துரையின் வீட்டிலிருந்து சிற் றுண்டியைச் சாப்பிட்டு விட்டு வீட்டிற்குச் சென்றார். மறுநாள் வழக்கத்துக்கு விரோதமாகவே சீக்கிரமாக ஆபீசுக்குச் சென்று தன் துரை வீட்டின் அனுப வத்தைப் பற்றி எல்லோரிடமும் அளந்தார். அது முதல் அந்தக் குமாஸ்தா இடை வேளை காலத்தில் 'டீ'யையும் 'பன்'னையும் சாப்பிட்டு வந்தார். விடுமுறை நாட் களிலும் வீட்டிலும் அதே முறையை அனுசரித்து வந்தார். அதன் பிறகு வீட்டில் இடைவேளையில் எந்தத் தின்பண்டங்களைச் செய்தாலும் அதற்கு 'டிபன்' என்றே பெயர் வழங்கினார் அந்தக் குமாஸ்தா. இதுவே நாளடைவில் 'டிபன்' என்ற சொல் லும் வழக்கத்திற்கு வந்திருக்கலாம் என்று நினைக்கிறேன். —ஜே. ராமமூர்த்தி.

# கமலா வருகிறாள்!

நாடோடி

"ஆடு மேய்த்த சிறுவனும், புலியும்" என்ற கதையில் எப்படி கடைசியில் புலி நிஜமாகவே வந்ததோ, அதே மாதிரி எங்கள் அக்கா கமலா டில்லியிலிருந்து நேற்று நிஜமாகவே வந்து விட்டாள். புலி வராத போதெல்லாம், ஓடி வந்த ஜனங்கள், எப்படி புலி வந்தபோது ஓடி வரவில்லையோ, அதே மாதிரி அவள் வராத போதெல்லாம் ஸ்டேஷனுக்குப் போய்க் காத்துக் கொண்டிருந்த அப்பா, இந்தத் தடவை அவள் நிஜமாகவே வந்த போது அவளை வரவேற்க ஸ்டேஷனுக்குப் போகவில்லை.

நேற்று ராத்திரி ஒன்பது மணியிருக்கும். நாங்கள் எல்லாரும் வழக்கம்போல் வாசல் திண்ணையில் போடப்பட்டிருக்கும் நாற்காலிகளில் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தோம். மன்னியும், பாருவும் உள்ளே கூடத்தில் வீடு இடிந்து விழும்படி கத்திப் பேசிக்கொண்டிருந்தார்கள். அதாவது மன்னி "வீட்டுக் கணக்கு" பார்த்துக் கொண்டிருந்தாள். பாரு ஏதோ கணக்கு ஒப்பித்துக் கொண்டிருந்தாள். அந்த சமயம் வாசலில் ஏதோ ஒரு மோட்டார் வந்து நின்ற சப்தம் கேட்கவே நாங்கள் பேச்சை நிறுத்தி விட்டு எட்டிப் பார்த்தோம்.

பார்த்தால் மோட்டாரிலிருந்து எங்கள் அத்திம்பேர், அக்கா கமலா, அவர்கள் பெண் மாலா மூன்று பேரும் இறங்கினார்கள்.

இவர்களைக் கண்டதும் அரட்டைக் கல்லி ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தான். கூடத்தில் வீட்டுக் கணக்கைக் கவனித்துக் கொண்டிருந்த மன்னியண்டை போனான்.

"கமலா வந்துவிட்டாள், கமலா வந்து விட்டாள்" என்றான்.

ஆனால் மன்னி இதை நம்பவில்லை. "போடா! கழுதை! எப்பக் கண்டாலும் என்னை இப்படிப் பயமுறுத்துகிறதுதான் உனக்கு வேலை. ஆமாம், அது இருக்கட்டும். காலம்பற கறி காய்க்காக என்னிடம் இரண்டு ரூபாய் வாங்கிக் கொண்டாயே அதற்கு என்ன கணக்கு?" என்று கணக்குக் கேட்க ஆரம்பித்து விட்டாள்.

"இல்லை, மன்னி! கமலா நிஜமாகவே வந்துவிட்டாள். நீ வேண்டுமானால் போய்ப் பார்" என்று அரட்டைக்கல்லி சொன்னான்.

இதற்குள் வாசலில் அப்பாவின் குரல் கேட்டது. "வாடியம்மா கமலா, வா. வாங்கோ ஸார், வாங்கோ. வாடி கண்ணு, மாலா, வா!"

இதைக் கேட்டதும் மன்னி நடுங்கிப் போய்விட்டாள்!

அப்பா, "வாங்கோ, ஸார், வாங்கோ" என்று சொன்ன குரலுக்கு அத்திம்பேர் பதிலே சொல்லவில்லை. பேசாமல் தடதடவென்று உள்ளே போய்க் கூடத்துப் பக்கத்தில் உள்ள சாமான் அறையில் போய் ஒளிந்துகொண்டார். எப்பொழுது பார்த்தாலும் அவர் அப்படித்தான் அந்த அறையில்போய் ஒளிந்து கொள்வார்.

நாங்கள் எல்லாரும் கமலாவைப் பின் தொடர்ந்தோம். "ஏம்மா, நீ வருகிறேன் என்று ஒரு கடிதம் போடக் கூடாதா? நான் ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே" என்றார் அப்பா கமலாவைப் பார்த்து.

இதற்குள் கமலாவைப் பார்த்துவிட்ட மன்னி, சற்றுச் சமாளித்துக் கொண்டு, "ஏண்டி கமலா, வருகிறேன் என்று ஒரு காலணா கார்டு போடக் கூடாது!" என்று கேட்டாள்.

"கார்டு இப்பொழுது காலணா இல்லை, மன்னி, முக்காலணா" என்று ஞாபகப் படுத்தினான் அரட்டைக்கல்லி பாலு.

மன்னிக்குக் கலியாணம் ஆன சமயத்தில் கார்டு காலணா விற்றதாம். அதை மன்னி இன்னும் மறக்கவில்லை. கார்டு முக்காலணா என்று மன்னிக்கு ஞாபகப் படுத்துவதற்கும் அரட்டைக்கல்லி பாலு மறப்பதில்லை.

"ஏன், கார்டு போட்டால்தான் ஸ்டேஷனுக்கு வருவீர்களோ? தந்தி யடித்தால் அது கணக்கில் சேர்த்தியல்ல போலிருக்கிறது?" என்று கடுகடுப்புடன் மன்னிக்குப் பதில் அளித்தாள் கமலா.

"தந்தி அடித்தாயா? வரவே இல்லையே!" என்றார் அப்பா.

"ஏன் வரும்? பெண் வருகிறாளே என்று ஆசை இருந்தால்தானே வரும்!" என்று கமலா கடித்துக் கொண்டே உள்ளே சென்றாள்.

இதற்குள் வாசலில் யாரோ "ஸார், ஸார்" என்று கத்தும் குரல் கேட்டது. இதைக் கேட்டதும் அப்பா, "இதோ பார். தந்தி வரவில்லை என்று சொன்ன

தற்கு நம்பமாட்டேன் என்றாயே! இதோ இப்பத்தான் தந்திக்காரன் வந்திருக்கிறான்'' என்று சொல்லிக் கொண்டே வாசல் திண்ணைக்குப் போனார்.

ஆனால் வாசலுக்குப் போனால் தந்திக்காரனையும் காணோம், கிந்திக்காரனையும் காணோம். டாக்ஸ டிரைவர்தான் நின்று கொண்டு இரைந்து கொண்டிருந்தான்.

"என்ன ஸார்! டாக்ஸி வாடகை கொடுக்காமல் எல்லாரும் உள்ளே போய் விட்டீர்களே! நான் எத்தனை நாழி தொண்டைத் தண்ணீர் வற்றக் கத்துவது?'' என்றான்.

எங்கள் அத்திம்பேர் எப்பொழுது வந்தாலும் இப்படித்தான். வந்ததும் வராததுமாகக் கூடத்துக்குப் பக்கத்தில் உள்ள சாமான் அறையில் போய் ஒளிந்து கொள்வார்.

எனக்கு வெகுநாள் வரையில் விஷயம் விளங்கவே யில்லை. எதற்காக வந்ததும், வராததுமாகச் சாமான் அறையில் போய் ஒளிந்து கொள்கிறார் என்று நினைப்பேன். கடைசியில்தான் விஷயம் புரிந்தது. இந்த டாக்ஸிக்காரனுக்கு வாடகை கொடுக்கப் பயந்து கொண்டுதான் அப்படி ஒளிந்து கொண்டிருக்கிறார்!

டாக்ஸிக்காரன் கத்தவே, அப்பா மன்னியைப் பார்த்து, "இன்னும் டாக்ஸிக்காரனுக்கு பணம் கொடுக்க வில்லை போலிருக்கிறதே, கொடுத்தனுப்புவது தானே'' என்று பொதுப் படையாக எல்லார் காதிலும் விழும்படியாகச் சொன்னார்.

ஆனால் இதை மன்னியோ அல்லது கமலாவோ, அல்லது அத்திம்பேரோ காதில் போட்டுக் கொள்ள வில்லை.

அத்திம்பேர் அப்பொழுது என்றுதான் தன் பெட்டியைத் திறந்து ஏதோ சாமானைத் தேடுவதுபோல் பாசாங்கு செய்தார். கமலாவும், மன்னியும், அப்பா சொன்னது காதில் விழாததேபோல், அதுவரை பக்கத்து வீடு இடிந்து விழும்படி பேசிக்கொண்டிருந்தவர்கள், அப்பொழுது அடுத்த தெரு இடிந்து விழும்படி பேச ஆரம்பித்தார்கள். தந்தி வந்ததா, இல்லையா என்பதைப் பற்றித் தான் அத்தனை விவாதம்! எவ்வளவுக்கெவ்வளவு அதிக சத்தம் போட்டுப் பேசுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அவர்கள் சொல்வதுதான் உண்மை என்பது அவர்கள் அபிப்பிராயம்!

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த பெண் மாலா கமலாவின் புடவைத் தலைப்பைப் பிடித்து இழுத்தாள்.

"அம்மா! டாக்ஸிக்காரனுக்கு இன்னும் பணம் கொடுக்க வில்லையா? அவன் கத்துகிறானே'' என்றாள்.

இந்த மாதிரி நல்ல சமயத்தில் மாலா தன்னை அவமானப்படுத்துகிறாளே என்று கமலாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆகவே அந்த ஆத்திரத்தை யெல்லாம் வைத்துக் கொண்டு, "கழுதை! பேசுகிற போது தொந்தரவு படுத்தாதே என்று எத்தனை தடவை சொல்லுகிறது?'' என்று மாலாவின் முதுகில் பளார், பளார் என்று நாலு அறை அறைந்தாள்.

பாவம், நான் சென்ற எத்தனையோ வருஷங்களாகக் கவனித்து வருகிறேன், ஒவ்வொரு தடவையும் வந்ததும் வராததுமாக மாலா இதே விஷயத்துக்காக அறை படுகிறாள். அதுதான் தாத்தா வீட்டுக்கு வருவது என்றாலே அவள் நடுங்குகிறாள் போலும்!

பேத்தி அடிபடுவதைப் பார்த்ததும் அப்பா கண்ணில் ஜலம் வந்து விட்டது.

"ஏண்டி! குழந்தையைப் போட்டுக் கொல்லறே?'' என்று அப்பா கமலாவைக் கடிந்து கொண்டு விட்டு, தானே டாக்ஸிக்காரனுக்கு வாடகையைக் கொடுப்பதற்காக, தம் கோட்டுப் பைகளில் துளாவிப் பார்த்தார்.

ஆனால் கோட்டுப் பைகளில் ஒரு தம் பிடி கூட இல்லை. கோட்டுப் பைகளில் அப்பா என்ன பணம் வைத்திருந்தாலும் விட்டு வைப்பதில்லை யென்று மன்னி விரதம் வைத்திருக்கிறாளே!

இதற்குள் டாக்ஸிக்காரனின் ரோதனை இன்னும் அதிகரித்தது. "ஸார்! ஸார்! என்ன ஸார் இது?'' என்றான்.

கடைசியில் அவன் தொல்லை பொறுக்காமலும், அப்பாவின் பரிதாபமான முகத்தைப் பார்க்கச் சகிக்காமலும், நானே என் கையை விட்டு டாக்ஸிக்காரனுக்குப் பணத்தை அழுதேன்.

இந்தமாதிரி மாப்பிள்ளைகளை மாமனார் வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் அந்த டாக்ஸிக்காரனுக்கு நல்ல அனுபவம் போலிருக்கிறது. ஒவ்வொரு தடவையும் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்டு, பேசின வாடகைக்கு மேல் இரண்டோ, மூன்றோ கழற்றிக் கொண்டு போய் விடுவான்.

டாக்ஸிக்காரன் வாடகை வாங்கிக் கொண்டு போவதற்கும், தந்தி வந்ததா இல்லையா என்பதைப் பற்றித் தங்களுக்குள் போட்டுக் கொண்டிருந்த சண்டையை மன்னியும் கமலாவும் முடிப்பதற்கும் சரியாக இருக்கும்.

அத்தனை சண்டைக்கும் இடையில் வாடகை கொடுப்பது யார் என்பதை மட்டும் மன்னி உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருப்பாள். மாப்பிள்ளையும் பெண்ணும் டிமிக்கி கொடுத்து விட்டார்கள், அசட்டுப் பிள்ளை நான்தான் அகப்பட்டுக் கொண்டு விட்டேன் என்று தெரிந்ததும் மன்னிக்கு ஆத்திரம், ஆத்திரமாக வரும்.

ஆனால் இந்தக் கோபத்தை யெல்லாம் பெண், மாப்பிள்ளைக்கு எதிரில் காட்ட முடியுமா? ஆகவே ராத்திரி வீட்டுக் கணக்கு எழுதும் சமயத்தில் மொணு, மொணு என்று பிடித்துக் கொள்வாள்.

“உன்னை யார் பணம் கொடுக்கச் சொன்னது? அவனே கொடுக்கட்டும் என்று இருப்பதுதானே!”

“எப்படி மன்னி இருக்கிறது? டாக்ஸிக்காரன் வாசலில் காத்துக் கொண்டிருப்பதை எதிர் வீட்டுக்காரர்கள், பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லாரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நான் எப்படிப் பேசாமல் இருப்பது?”

“பேசாமல் இருப்பானேன்? அவனே கொடுக்கட்டும் என்று பேசாமல் இருப்பது தானே? இங்கே, என்ன கொட்டிக் கிடக்கிறது என்று நினைச்சானா, என்ன? இல்லை, அவன் ஆம்படையானுக்குத்தான் சம்பளம் இல்லையா?” என்று இப்படி மன்னி ஒரு பெரிய பிரசங்கம் பண்ண ஆரம்பித்து விடுவாள்.

பிரசங்கத்தின் ஆரம்பத்தில் மன்னி நம்மைக் கடிந்து கொள்ளுகிறாள் என்று நினைத்துக் கொள்ளும் நான் பிரசங்கத்தின் சீலத்தைப் பார்த்து விட்டு, அந்தப் பிரசங்கம் நமக்காக அல்ல, அடுத்த அறையில் இருக்கும் கமலாவின் காதில் விழுவதற்காகத்தான் என்று தெரிந்து கொள்வேன்.

மன்னி பிரசங்கம் பண்ணி முடிப்பதற்கும், தந்திக்காரன் “ஸார்! தந்தி” என்று தந்தியை நீட்டுவதற்கும் சரியாக இருக்கும்.

“இந்தக் காலத்தில் தந்தியைவிடத் தபால்தான் சீக்கிரமாக வருகிறது” என்று நான் கமலாவுக்கு எத்தனையோ தடவைகள் சொல்லியாகி விட்டது. இருந்தும் ஒவ்வொரு தடவையும் தபால் போடுவதற்குப் பதில் தந்திதான் அடிக்கிறாள். தந்தி அடிப்பதுதான் பெருமை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாளோ, என்னமோ! ஆனால் அந்தப் பாழும் தந்தி ஒரு தடவையாவது முன்னால் வந்து சேர்வதில்லை. சொல்லி வைத்தாற்போல் அவள் வீட்டுக்கு வந்த பிறகுதான் தந்தி வந்து சேருகிறது!




இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
எச். ஜே. ப்ஸ்டர் & கோ., லிட். பம்பாய், கல்கத்தா, மதராஸ், லாகூர்

# நீர் கடக்காது –
## நனைவுமேற்காது!




பற்களைச் சுத்தப்படுத்தி, வெண்மையாக்குவதில் 60% அதிக பயனளிக்க வல்லது.

விஷக் கிருமிகளகற்றப் பட்ட கிலாஸ் ட்யூபுகளில் பாக் செய்யப்பட்டது.

ஒரு வருட உத்தர வாத முடையது.

மிருகங்களின் மயிரே கிடையாது

விநியோகஸ்தர்கள் :
ஏற்றுமதி வியாபார விவரங்களுக்கு இவ் விலாசத்திற் கெழுதவும்:
எஸ். டி. ஸெய்மூர் & கோ. இன்கார்ப்பொரேடெட்.
120 வால் ஸ்ட்ரீட், நியூயார்க்

# டாக்டர் வெஸ்ட்ஸ்
## டூத் பிரஷுகளும் டூத் பேஸ்டும்

Copyright

JWT (I) LTD

# சைபால் (Regd) CIBOL

முகப்பரு, சேத்துப்புண், சிரங்கு, வேனல் கட்டி தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கை கண்ட மருந்து

•

# அயோடிசால் (Regd) IODISAL

ரத்தத்தைச் சுத்தி செய்து தேகத்திற்கு ஆரோக்கியத்தைக் கொடுக்கும்.

**பாட்டில் 1-க்கு விலை ரூ. 2—0—0**

•

# பேபி - கிரைப் BABY - GRIPE

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு, வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப்போக்கு, முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

---

தயாரிப்பவர்கள்:

## தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி, மதுரை

மதராஸ் ஸிடி, நெல்லூர், ஸீடெட், விசாகப்பட்டணம் ஜில்லாக்களுக்கு ஏஜண்டுகள்:

**ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ், பி. டி., மதராஸ்**

குண்டூர், கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்களுக்கும் நிஜாம் சமஸ்தானத்திற்கும் ஏஜண்டுகள்:

**சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா**

மைசூர் சமஸ்தானத்திற்கு ஏஜண்டுகள்:

**சேஷமஹால் பார்மஸி, பெங்களூர் ஸிடி.**

## ஸினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

கண்ணாம்பா




சருமப் பாதுகாப்பிற்கு லக்ஸ் சோப் முறையையே தான் பின்பற்றுவதாக கண்ணாம்பா கூறுகிறார். பாக மறுவின்றிச் சருமத்தை மிருதுவாகவும், மழமழப்பாகவும் வைத்துக்கொள்ள இந்தச் சுகந்த அழகைத் தரும் சோப்பின் நுரையில் நம்பிக்கை வைக்கக் கூடுமென்று, மற்ற இந்திய ஸினிமா நட்சத்திரங்களைப் போலவே இவரும் கண்டறிந்திருக்கி அறிவாளியானபடியால், ஒழுங்காக லக்ஸ் சோப்பை உபயோகிக்க இவர் தவறுவதில்லை.

# லக்ஸ் டாய்லட் சோப்

LTS. 132-60-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# எனக்கு மிகப்பிரியமானது..எப்பொழுதுமே




நேர்த்தியான வாசனை, உயர் ரகம்— இவ்விரண்டு சிறந்த குணங்களால் எல்லோராலும் மிக விரும்பப்படும் அச்வினி மிட்டாய்கள், ஜனங்களிடையே சுயமாகவே நற்பெயர் சம்பாதித்துக் கொண்டாகிவிட்டன. எங்களது தொழிற்சாலையில் நாங்கள் டாப்பிகள், காரமல்கள், ஆஸிட் ட்ராப்புகள், கூடுதல் காரமான பேப்பர்மின்டுகள், புதிய மிட்டாய் வகையறாக்கள் செய்வதில் ஓய்வொழிவின்றி வேலை செய்து வருகிறோம். எனினும், இம் மிட்டாய்களுக்குள்ள பெரும் கிராக்கியை எங்களால் சமாளிக்க முடிகிறதில்லை. வெகு சீக்கிரம், வெளி ராஜ்யத்திலிருந்து வரவழைத்த, பூராவும் சுயமாகவே இயக்கப்பெற்ற புதிய இயந்திரங்கள் மும்முரமாக வேலை துவக்கி வரும். அப்பொழுது, நீங்கள் அதிசயிக்கும்படியான இன்னுமெத்தனையோ தினுசு மிட்டாய்கள், அதிகம் இனிப்புவாய்ந்தவைகள் உங்களுக்குக் கிடைக்கலாகும்.

# ☆ அச்வினி

டாப்பிகள் (Toffees)—காரமல்கள்—அதிகப்படி காரமான பேப்பர்மின்டுகள்—பழவகைகளால் செய்யப்பட்ட பேப்பர்மின்டுகள்-காப் லாஸெஞ்சுகள்—ஜூஜூபுகள்—ஷுகர் கோடெட் பதாம், பிஸ்கட்கள் — ஆஸிட் ட்ராப்ஸ் (Acid Drops) — ஐஸிங் ஷுகர் (Icing Sugar)

**தி மஹாலக்ஷ்மி ஷுகர் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்.**
**ஹமீரா, கபூர்த்தலா ஸ்டேட்.**

தென்னிந்தியாவுக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
மெஸர்ஸ், வோல்க்கார்ட் பிரதர்ஸ் (இந்தியா) லிமிடெட்.,
21, லிங்க செட்டித் தெரு : தபால் பெட்டி 21, மதராஸ்.
ஷா ஆல்வின்ஸ்டர் பில்டிங், மட்டாஞ்சேரி ரோடு, தபால் பெட்டி 47, கொச்சி

## அறிவுக்கு விருந்து

கதைக் கோவை (நான்காம் தொகுதி)

| | | |
|---|---|---|
| 75 எழுத்தாளரின் சிறு கதைகள் | | 10-8-0 |
| புயல் | மஹாகவி டாகூர் | 5-0-0 |
| சதுரங்கம் | ,, ,, | 1-12-0 |
| இளமைப் பருவம் | ,, | 1-8-0 |
| கல்லன் வேட்கை | ,, | 2-0-0 |
| என் சரித்திரம் | மகாத்மா காந்தி | 3-8-0 |
| வாழ்க்கையே வாழ்க்கை | — எஸ். வி. வி. | 2-0-0 |
| உல்லாச வேளை | ,, ,, | 3-8-0 |
| புது மாட்டுப் பெண் | ,, | 1-2-0 |
| வசந்தன் | ,, ,, | 2-0-0 |
| தாசிப் பெண் | ஏ. எஸ். பி. ஐயர் | 1-12-0 |
| விஜயா | சரத் சந்திரர் | 3-0-0 |
| ஜான்சி ராணி | — எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் | 0-6-0 |
| காட்டூர் ராமு | ஸ்ரீநாராயணையா | 2-0-0 |
| திக்கற்ற இரு குழந்தைகள் | — பண்டித ச. ம. நடேச சாஸ்திரி | 2-8-0 |
| தங்கம்மாள் | ஸ்ரீமதி வேங்கடலக்ஷ்மி | 2-0-0 |
| குழந்தை மனம் | த. நா. சேனாபதி | 2-0-0 |
| இரு துருவங்கள் | — வி. ஸ. காண்டேகர் | 5-8-0 |
| எரி நட்சத்திரம் | ,, | 4-8-0 |
| வாடா விளக்கு | கு. குருசாமி | 2-0-0 |
| கைக் குத்தலரிசியும் — மில்லரிசியும் | ராஜாஜி | 0-10-0 |
| தாவரங்களின் இல்லறம் | — ராஜாஜி | 1-8-0 |
| உரிமையும் கடமையும் | — ராதாகிருஷ்ண பிள்ளை | 2-0-0 |
| ஜனாதிபதி ரூஸ்வெல்ட் | | 0-12-0 |
| அன்னை கஸ்தூரி | | 0-12-0 |
| மார்ஷல் ஸ்டாலின் | | 0-12-0 |
| பால பாரதம் | | 0-13-0 |

தபால் செலவு தனி



விற்பனை ஏஜண்டுகள் :—

**சக்தி காரியாலயம்**

350, வெரைடி ஹால் ரோடு

கோயமுத்தூர்

இதர கம்பெனிப் புத்தகங்களும் கிடைக்கும்.



## அடுத்த விளையாட்டுப் பந்தயத்தில்



## அம்ருதா
### ரத்த சுத்தி திராவகம்..



கலக்கம், ஆயாசம் இல்லாமல் நன்கு விளையாடி வெற்றி பெறச் செய்கின்றது. நரம்புகளுக்கு நன்கு வலுவூட்டுகின்றது

**கேசரி குடீரம் லிமிடெட் மதராஸ்**

நிஜாம் சமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :—

ஸ்ரீராம ஜெனரல் ஸ்டோர்ஸ்

செகந்திராபாத் : பெஜவாடா : மதுரை

## கலியாணப் பாலிஸி





### உங்களது பெண்ணிற்கு

மிகவும் அவசியமானது. வரதக்ஷிணை பழக்கம் ஒழிய வேண்டியதானாலும், இது மிகவும் அவசியமாகவே இருக்கும். இன்று மிகவும் கொடூரமான இப்பழக்கம் முன் காலத்தில் நமது அருமைப் பெண்கள் தங்களது புக்ககத்தில் சகல சௌகரியங்களுடனும் வாழ வேண்டும் என்ற பெற்றோர்களின் இயற்கையான நல் லெண்ணத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆகையால் கூடிய சீக்கிரம் ஒரு "கலியாணப் பாலிஸி" செய்து வாங்கிக் கொள்வது மிகவும் புத்திசாலித்தனமான ஒரு காரியமாகும்.

பூரா விவரங்களுக்கும் எழுதவும்

**நாஷனல்**

**இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

7, கவுன்ஸில் ஹவுஸ் ஸ்டிரீட், கல்கத்தா.

மதராஸ் பிராஞ்சு:

"நாஷனல் இன்ஷ்யூரன்ஸ் பில்டிங்"

362, சைனாபஜார் ரோடு

எஸ்பிளனேட்

●

சப் ஆபீஸ்கள்:

பெங்களூர் :: மதுரை



## தி இந்தியன் பாங்க் லிமிடெட்

★

தலைமை ஆபீஸ்:

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"

வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்,
எழும்பூர்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 68,71,800

செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 41,09,478

ரிஸர்வ் நிதி ரூ. 56,15,009

டெபாஸிட்டுகள் ரூ. 12½ கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

**Gordo-Car.** (For Cars, Chromium lining of Car, Cycles, Safes, Etc.)

Arrests corrosion, maintains polish. The best shine for chromium lining of Car, Cycles, Safes, Boxes, Etc.

Re. 1/- per tin of about ½ oz.

**Gordo-Film.** (For Films, Film protector and heat resisting.)

Carbon action ensures strength to resist heat and keeps Film spotless and clean.

Rs. 4/- per tin of about 1 oz.

**Gordo-Glashine.** (For Car wind-screen, Glasses, Mirrors and spectacles.)

Cleans glasses with high polish. Does not allow mist on glasses. Highly useful for motorists, Railways, Hotels and Household purposes.

Rs. 2/- per tin of about 1 oz.

**Trade discount 12½% on one dozen tins. Packing and Postage free for one dozen tins.**

●

— Trade Enquiries Invited: —

# The S. I. T. E. Co. (Madras) Ltd.,

**64, Mint Street :: P. T. Madras**

Grams: "Sitecompy"

Phone: "2417"




தற்சமயத்திற்கு குணமளிக்கும் மருந்துகளை வாங்குவது முற்றிலும் வீண்.

"புரோஹித் சுவாஸ ஹரி" தற்சமயத்திற்கு மட்டும் அல்ல "ஆஸ்த்மா"வின் மூல காரணங்களையும் கண்டுபிடித்து நீடித்த குணத்தை அளிக்கும். சாப்பிட ஆரம்பித்தவுடனே இளைப்பை நிறுத்தி, ஜீரணத்தையும் அதிகரிக்கிறது. நாளடைவில் பலத்தையும் கொடுத்து "ஆஸ்த்மா"வை வேரோடு ஒழிக்கும்.

"ஆஸ்த்மா", இளைப்பு (கஷ்ட சுவாசம்) மூச்சுவலி, தொண்டை கரகரப்பு, இருமல், இன்னும் இதைப்போன்ற சுரம் சம்பந்தப்பட்ட வியாதிகளுக்கு "சுவாஸ ஹரி"ப்ளெயின் (நீலப் பெட்டி) சாப்பிட வேண்டும். அஜீர்ணம், வயிறு உப்பிசம் உள்ள ஆஸ்த்மா வியாதி உள்ளவர்கள் "சுவாஸ ஹரி" காம்பௌண்ட் (சிவப்பு பெட்டி) உபயோகிக்க வேண்டும்.

ஒவ்வொரு மருந்து கடைகளிலும் கிடைக்கும். 3, 6, 12, அவுன்ஸ் அளவுகளில் முறையே ரூபா 3-6-0; 5-12-0; 10-0-0. ஆக விலை.

தயாரிப்பவர்கள்:

**புரோஹித் பார்மஸி, கோலாப்பூர், M.S.M.**

சென்னை ஸ்டாக்கிஸ்டுகள்:

அப்பா அன்டு கோ., சைனா பஜார்.
அமிருதாஞ்ஜன் பார்மஸி,
கோவிந்தப்பநாய்க்கன் தெரு.

திருவாங்கூர் ஸ்டாக்கிஸ்ட்:

K. C. மாத்யூ & கோ.,
மருந்து வியாபாரிகள்,
கோட்டயம்.



**புரோஹித்ஸ் ஸ்வாஸஹாரி**

Regd. No. M. 4392

# சார்லீஸ்




# மில்க் பிஸ்கட்ஸ்

அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

**CHARLEY & CO., USILAMPATTI.**

பிராஞ்ச : 158, பூனமல்லி ஹைரோடு, மதராஸ்




நேர்த்தியான வாசனை, உயர் ரகம்—இவ்விரண்டு சிறந்த குணங்களால் எல்லோராலும் மிக விரும்பப்படும் அச்வினி மிட்டாய்கள், ஜனங்களிடையே சுயமாகவே நற்பெயர் சம்பாதித்துக் கொண்டாகிவிட்டன. எங்களது தொழிற்சாலையில் நாங்கள் டாப்பிகள், காரமல்கள், ஆஸிட் ட்ராப்புகள், கடுதல் காரமான பெப்பர்மின்டுகள், முதலிய மிட்டாய் வகையறுக்கள் செய்வதில் ஓய்வொழிவின்றி வேலை செய்து வருகிறோம். எனினும், இம் மிட்டாய்களுக்குள்ள பெரும் கிராக்கியை எங்களால் சமாளிக்க முடிகிறதில்லை. வெகு சீக்கிரம், வெளி ராஜ்யத்திலிருந்து வரவழைத்த, பூராவும் சுயமாகவே இயக்கப்பெற்ற புதிய இயந்திரங்கள் மும்முரமாக வேலை துவக்கி வரும். அப்பொழுது, நீங்கள் அதிசயிக்கும்படியான இன்னுமெத்தனையோ தினுசு மிட்டாய்கள், அதிகம் இனிப்புவாய்ந்தவைகள் உங்களுக்குக் கிடைக்கலாகும்

# அச்வினி

டாப்பிகள் (Toffees)—காரமல்கள்—அதிகப்படி காரமான பெப்பர்மின்டுகள்—பழவகைகளால் செய்யப்பட்ட பெப்பர்மின்டுகள்-காம் லாஸெஞ்சுகள்—ஜுஜுபுகள்—சுகர் கோடெட் பதாம், பிஸ்தாக்கள் — ஆஸிட் ட்ராப்ஸ் (Acid Drops) — ஐஸிங் ஷுகர் (Icing Sugar)

**தி மஹாலக்ஷ்மி ஷுகர் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்.**
**ஹமீரா, கபூர்த்தலா ஸ்டேட்.**
தென்னிந்தியாவுக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
மெஸர்ஸ், வொல்க்கர்ட் பிரதர்ஸ் (இந்தியா) லிமிடெட்.,
21, லிங்க செட்டித் தெரு : தபால் பெட்டி 21, மதராஸ்.
ஷா ஆலிவினைதர் பில்டிங், மட்டாஞ்சேரிரோடு, தபால்பெட்டி 47, கொச்சி

# அறிவுக்கு விருந்து

கதைக் கோவை (நான்காம் தொகுதி)

| | | |
|---|---|---|
| 75 எழுத்தாளரின் சிறு கதைகள் | | 10-8-0 |
| புயல் | மஹாகவி டாகூர் | 5-0-0 |
| சதுரங்கம் | ,, ,, | 1-12-0 |
| இளமைப் பருவம் | ,, | 1-8-0 |
| கல்லன் வேட்கை | ,, | 2-0-0 |
| என் சரித்திரம் | மகாத்மா காந்தி | 3-8-0 |
| வாழ்க்கையே வாழ்க்கை | — எஸ். வி. வி. | 2-0-0 |
| உல்லாச வேளை | ,, ,, | 3-8-0 |
| புது மாட்டுப் பெண் | ,, | 1-2-0 |
| வசந்தன் | ,, ,, | 2-0-0 |
| தாசிப் பெண் | ஏ. எஸ். பி. ஐயர் | 1-12-0 |
| விஜயா | சரத் சந்திரர் | 3-0-0 |
| ஜான்சி ராணி | — எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் | 0-6-0 |
| கரட்டூர் ராமு | சீதாராமையா | 2-0-0 |
| திக்கற்ற இரு குழந்தைகள் | — பண்டித ச. ம. நடேச சாஸ்திரி | 2-8-0 |
| தங்கம்மாள் | ஸ்ரீமதி வேங்கடலக்ஷ்மி | 2-0-0 |
| குழந்தை மனம் | த. நா. சேனாபதி | 2-0-0 |
| இரு துருவங்கள் | — வி. ஸ. காண்டேகர் | 5-8-0 |
| எரி நட்சத்திரம் | ,, | 4-8-0 |
| வாடா விளக்கு | கு. குருசாமி | 2-0-0 |
| மைக் குத்தலரியும் — பில்லரியும் | ராஜாஜி | 0-10-0 |
| தாவரங்களின் இல்லறம் | — ராஜாஜி | 1-8-0 |
| உரிமையும் கடமையும் | — ராதாகிருஷ்ண பிள்ளை | 2-0-0 |
| ஜனாதிபதி ரூஸ்வெல்டு | | 0-12-0 |
| அன்னை கஸ்தூரி | | 0-12-0 |
| மார்ஷல் ஸ்டாலின் | | 0-12-0 |
| பால பாரதம் | | 0-13-0 |

தபால் செலவு தனி

●

விற்பனை ஏஜண்டுகள் :—

**சக்தி காரியாலயம்**

350, வெரைட்டி ஹால் ரோடு

**கோயமுத்தூர்**

இதர கம்பெனிப் புத்தகங்களும் கிடைக்கும்.


அடுத்த விளையாட்டு
பந்தயத்தில்



**அம்ருதா**
ரத்த சுத்தி
திராவகம்.



கலக்கம், ஆயாசம்
இல்லாமல் நன்கு
விளையாடி வெற்றி
பெறச் செய்கின்றது.
நரம்புக்களுக்கு நன்
கு வலுவூட்டுகின்றது

கேசரி குடீரம் லிட், மதராஸ்

நிஜாம் சமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :—

சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்

செகந்திராபாத் : பெஜவாடா : மதுக்